கழக வெளியீடு: ௬௯௨
1

வச்சணந்தி மாலை

என்னும்

# வெண்பாப் பாட்டியலும்

# வரையறுத்த பாட்டியலும்




தமிழ்ப்பண்டிதர்

கொ இராமலிங்கத் தம்பிரான் அவர்கள்

எழுதிய

விளக்கவுரையுடன்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்
திருநெல்வேலி - 6. சென்னை - 1.

1964

# பதிப்புரை

பாட்டியல், எழுத்து சொல் பொருள் யாப்பு அணியென்னும் ஐவகை இலக்கணங்களுள் ஒன்ருக வைத்து எண்ணப்படுவது இல்லையாயினும், அவற்றை முடிவுசெய்ய வரும் ஒரு சிறந்த உறுப்பாகும். அவற்றிற்கு ஒழிபியல் போன்று அவற்றிற் கூறப் படாத பொருள்கள் பலவற்றைக் கூறுதற்காகப் பாட்டியல் தோன்றிற்று. நூலினைக் கற்போர்க்கு இவ்வுண்மை நன்கு விளங்கிக் கிடக்கும்.

பாட்டியலின் மரபை வெண்பாவாற் கூறலின் வெண்பாப் பாட்டியல் எனவும், வச்சணந்திதேவரென்னும் முனிவர் செய் வித்தலின் வச்சணந்திமாலை எனவும் இந்நூல் பெயர்பெற்றது. இந்நூல் செய்தார் குணவிரபண்டிதர். இந்நூற் பாயிரவுரையில் இஃது எந்நூல் வழித்தோவெனின், 'இந்திரகாளி யென்னும் பாட்டியன் மரபின் வழித்து' என்று கூறப்படுதலின் வெண்பாப் பாட்டியலுக்கு முதனூல் இந்திரகாளி யென்பது பெறப்படும். உரையுள் அதனினின்றும் மேற்கோள்களும் காணப்படுகின்றன. சிலப்பதிகார வுரையில் அடியார்க்கு நல்லார் கூறியுள்ள இந்திர காளியம் யாமளேந்திரராற் செய்யப்பட்ட இசைத்தமிழ் நூலா தலின் இஃது அதனின் வேருதல் வேண்டும்.

மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் பதிப்பித்திருக்கும் பன்னிரு பாட்டியலும், சிதம்பரப் பாட்டியலும், பாட்டியற் கொத்தென் னும் புத்தகத்தில் காணப்படும் நவநீதப்பாட்டியலும் பாட்டியன் மரபு கூறும் வேறு நூல்கள். இலக்கண விளக்கத்துள்ளும் செய்யுளியலுக்குப் பின் பாட்டியலென்னும் இயலுள் பாட்டியன் மரபு கூறப்பட்டது.

வெண்பாப் பாட்டியல் இக்காலத்துச் செய்யப்பட்டதென அறுதியிட்டு உரைத்தற்குப் போதிய சான்று ஒன்றுமில்லை! இந்நூல் திரிபுவனதேவன் என்னும் அரசன் காலத்ததெனவும், சங்கத்தாராற் கேட்கப்பட்ட தெனவும் உரையிற் கூறப்பட் டுள்ளன. சங்கம் என்றது சமணர் சங்கங்களுள் ஒன்றுபோலும்.

வெண்பாப் பாட்டியலோடு பதிப்பித்திருக்கும் சம்பந்தப் பாட்டியல் என்னும் வரையறுத்த பாட்டியல் சீர் முதலிய மங்கலச் சொற்களுக்குப் பொருந்திய பெயர்களை யுணர்த்த வந்தது. இதனை இயற்றினார் சம்பந்தமாமுனிவர் என்றும், சில பிரதிகளில் இந்நூற் பெயர் சம்பந்தப் பாட்டியலென வுள்ளதென்றும் பாட்டியற்கொத்து முகவுரை யுடையார் கூறினர். நூலினுள் ளேயே முதற் கலித்துறையுள் "சம்பந்தமாமுனி பாதமலர் நேர் கொண் டிறைஞ்சி" என்று ஆசிரியர் கூறுதலின் வெண்பாப் பாட்டியலை வச்சணந்திமுனிவர் செய்வித்தது போலச் சம்பந்தமா முனிவர் வரையறுத்த பாட்டியலைச் செய்வித்தவராவரென்று துணிய இடமுண்டு.

இந்நூலுக்கு இதற்குமுன் பொழிப்புரை குறிப்புரை போன்றவை வெளியாயிருப்பினும், மேற்கோள் எடுத்துக்காட்டு இவைகளின் விளக்கங்களுடன் ஓர் உரையில்லாக் குறையை நிறைவு செய்வான் சென்னைத் தமிழ்ப் பண்டிதர் திரு. கொ. இராமலிங்கத் தம்பிரான் அவர்களைக்கொண்டு இவ்விளக்கவுரை எழுதுவித்தோம்.

இவ்விளக்கவுரையை வேறு பாடப் பிரதிகளுடன் ஒப்பு நோக்கிச் செவ்வை செய்தும், அச்சிடும்போது பிழை திருத்தம் பார்த்துமுதவிய பாளையங்கோட்டை அர்ச் சவேரியர் கல்லூரித் தலைமைத் தமிழாசிரியர் திருவாளர் வித்வான் பு. சி. புன்னைவன நாத முதலியாரவர்கட்கு இக் கழகத்தார் நன்றி என்று முரித் தாகும்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

வச்சணந்தி மாலை

என்னும்

# வெண்பாப் பாட்டியல்

## மூலமும் உரையும்



### பாயிரம்

மதிகொண்ட முக்குடைக்கீழ் வாமன் மலர்த்தாள்
துதிகொண்டு நாளுந் தொழுது—நுதிகொண்ட
பல்கதிர்வே லுண்கண்ணாய் பாட்டியலைக் கட்டுரைப்பன்
தொல்லுலகின் மீதே தொகுத்து.

என்பது சூத்திரம்.

(இதன் பொருள்) கூர்மை கொண்ட பல கதிர்களையுடைய வேல்போலும் மை யுண்ட கண்களையுடைய மாதே! சந்திரனை யொத்த மூன்று குடையின்கீழ் எழுந்தருளிய அருகக் கடவுளின் தாமரைமலர் போன்ற திருவடிகளை எந்நாளும் துதித்து வணங்கி வெண்பாப் பாட்டியலை இவ்வுலகின்கண் தொகுத்து உறுதியாகச் சொல்லுவேன் (யான்) (என்றவாறு).

யாதானும் ஒரு நூல் உரைக்குமிடத்துப் பாயிரம் உரைத்து உரைக்க வென்பது மரபு. பாயிரம் என்பது முகவுரை. அப் பாயிரம் பொதுவும் சிறப்பும் என இருவகைப்படும். அவற்றுள், பொதுப்பாயிரம் நான்கு வகைப்படும்;

"ஈவோன் தன்மை யீத லியற்கை
கொள்வோன் தன்மை கோடன் மரபென
ஈரிரண் டென்ப பொதுவின் தொகையே"

என்றாகலின்.

(இ - ள்.) ஈவோன் தன்மை - ஆசிரியனிலக்கணம்; ஈதல் இயற்கை - அவன் வித்தை கொடுக்கும் முறைமை; கொள்வோன் தன்மை - மாணாக்கனிலக்கணம்; கோடல் மரபு - அவன் வித்தை கொள்ளு முறைமை.

ஆசிரியர் இருதிறத்தார்: கற்கப்படுவோரும், கற்கப்படா தோருமென. அவருள் கற்கப்படும் ஆசிரியர் நான்கு திறத்தர்:

"மலைநிலம் பூவே துலாக்கோலென் றின்னர்
உலைவி லுணர்வுடை யோர்."

நிலம் - பூமி, பூ - மலர், துலாக்கோல் - தாரசுகோல், உலைவு இல் - கெடுதலில்லாத, உணர்வுடையோர்-உலக நடையை யறிகிற அறிவுடையோர்.

கற்கப்படா ஆசிரியர் நான்கு திறத்தர்:

"கழற்பெய் குடமே மடற்பனை முடத்தெங்கு
குண்டிகைப் பருத்தியோ டிவையனை யாரே."

கழற்பெய் குடமாவது கொள்வோ னுணர்வு சிறிதாயினும் தான் கற்றதெல்லாம் ஒருங் குரைத்தல்: "பெய்த முறையன்றிப் பிறழ உடன்தருஞ் செய்தி கழற்பெய் குடத்தின் சீரே." மடற் பனையாவது பிறராற் கிட்டுதற்கு அரியதாகிய இனிதாகிய பயன் களைக் கொண்டிருத்தல்: "தானே தரக்கொளி னன்றித் தன்பால், மேவிக் கொளக்கொடா இடத்தது மடற்பனை." முடத்தெங்கு என்பது ஒருவர் நீர் வார்க்கப் பிறர்க்குப் பயன்படுவதுபோல ஒருவர் வழிபடப் பிறர்க்கு உரைத்தல்: "பல்வகை யுதவி வழிபடு பண்பின், நல்லோரொளித் தல்லோர்க் களிக்குமுடத் தெங்கே." குண்டிகைப் பருத்தியென்பது சொரியினும் வீழாது சிறிது சிறிதாக வாங்கக் கொடுக்கு மதுபோலக் கொள்வோனுணர்வு பெரிதாயினுஞ் சிறிது சிறிதாகக் கூறுதல்:

"அரிதிற் பெயக்கொண் டப்பொருள் தான்பிறர்க்
கெளிதீ வில்லது பருத்திக் குண்டிகை."

மாணாக்கரும் இருதிறத்தர்: கற்பிக்கப்படுவோரும், கற்பிக்கப் படாதோரு மென. அவருள் கற்பிக்கப்படு மாணாக்கர் அறுவகையர்:

"தன்மக னாசான் மகனே மன்மகன்
பொருள்நனி கொடுப்போன் வழிபடு வோனே
உரைகோ ளாளனோ டிவரென மொழிப."

தன்மகன், ஆசான்மகன், மன்மகன்-அரசன் மகன், பொருள் நனிகொடுப்போன் - பொருளை மிகுதியாகக் கொடுப்பவன், வழி படுவோன் - (தனக்கு) வழிபாடு செய்பவன், உரைகோளாளன் - (தான் சொல்லும்) உரையை (விரைவிலே) மனத்திற் கொள்ளும் அறிவுடையவன்.

இவர் குணம் :

"அன்னங் கிளியே நன்னிறம் நெய்யரி
யானை ஆனே றென்றிவை போலக்
கூறிக் கொள்வர் குணமாண் போரே."

அன்னம் :—'பாலும் நீரும் பாற்படப் பிரித்தல்
அன்னத் தியல்பென அறிந்தனர் கொளலே.'

கிளி :—'கிளந்தவா கிளத்தல் கிளியின தியல்பே.'

நல்நிறம் :—'எந்நிறந் தோய்தற்கு மேற்ப தாதல்
நன்னிறத் தியல்பென நாடினர் கொளலே.'
(நன்னிறம் - வெண்ணிறம்.)

நெய்யரி :—'நல்லவை யகத்திட்டு நவைபுறத் திடுவது
நெய்யரி மாண்பென நினைதல் வேண்டும்.'
(நெய்யரி - பன்னாடை.)

யானை :—'குழுவுபடூஉப் புறந்தருதல் குஞ்சரத் தியல்பே.'
(குஞ்சரம் - யானை. குழுவுபடூஉப் புறந்தருதல் - கூட்டமாய்த் தம்மைக் காத்துக்கொள்ளுதல்.)

ஆனேறு :—'பிறந்த வொலியின் பெற்றியோர்ந் துணர்தல்
சிறந்த வானேற்றின் செய்தி யென்ப.'
(ஆனேறு - இடபம்.)

கற்பிக்கப்படா மாணாக்கர் எண்வகையர் :

## இன்னிசை வெண்பா

"மடிமானி பொச்சாப்பான் காமுகன் கள்வன்
அடுநோய்ப் பிணியாள னாறாச் சினத்தன்
தடுமாறு நெஞ்சத் தவனுள்ளிட் டெண்மர்
நெடுநூலைக் கற்கலா தார்."

ஆசிரியன் ஈயும் முறைமை:

"ஈத லியல்பே யியல்புறக் கிளப்பின்
பொழிப்பே யகல மெச்ச நுட்பமெனப்
பழிப்பில் பல்லுரை பயின்ற நாவினன்
புகழ்ந்த மதியில் திகழ்ந்த நாளில்
தெளிந்த அறிவினன் தெய்வம் வாழ்த்திக்
கொள்வோ னுணரும் வகையறிந் தவன்வயின்
கொள்வரக் கொடுத்தன் மரபென மொழிப."

கொள்வோன் முறைமை:

"கொள்வோன் தன்மை கூறுங் காலைப்
பொழுதொடு சென்று வழிபடன் முனியான்
முன்னும் பின்னும் இரவினும் பகலினும்
அகலா னாகி அன்பொடு புணர்ந்தாங்
காசற வுணர்ந்தோன் வாவென வந்தாங்
கிருவென விருந்து சொல்லெனச் சொல்லி
நெஞ்சு களனாகச் செவிவா யாகக்
கேட்டவை கேட்டவை வலவ னாகிக்
கொடுத்தன கோட லவனது பண்பே."

இவை எல்லா நான்முகத்து முரைக்கப்படுதலிற் பொதுப் பாயிரமாம்.

இனிச் சிறப்புப் பாயிரம் எண்வகைப்படும்.

"ஆக்கியோன் பெயரே வழியே எல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர் பயனோ டாயெண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே."

என்றாராகலின்.

அன்றியும், இவ் வெட்டுடன் காலம், களன், காரண மென்னும் மூன்றையுங் கூட்டிப் பதினொன் றென்பாரு முளர்;

"காலங் களனே காரண மென்றிம்
மூவகை யேற்றி மொழிநரு முளரே"

என்றாராகலின்.

அவற்றுள், ஆக்கியோன் பெயரென்பது நூல் செய்த ஆசிரியன் பெயர். இந்நூல் யாராற் செய்யப்பட்டதோ வெனின்:

" கற்றவர் புகழுங் களந்தையென் பெரும்பதிக்
குற்றமில் வாய்மைக் குணவீர பண்டிதன்"

என்னும் ஆசிரியனாற் செய்யப்பட்டது.

வழியேயென்பது இன்னதின் வழித்து என்றல். இஃது, எந்நூல் வழித்தோ வெனின்: இந்திரகாளி யென்னும் பாட்டியன்மரபின் வழித்து.

எல்லை யென்பது நடக்கு மெல்லை. இஃது எவ்வெல்லையினடக்குமோ வெனின்: தமிழ் வழங்குமிட மெங்கும் என்க.

நூற்பெய ரென்பது நூலினது பெயரிதுவென்றல். இந்நூல் என்ன பெயர்த்தோ வெனின் :

எய்திய மணிப்பூ ணிலங்குமணி நெடுந்தேர்
வேந்தர் சூடும் விரைசெழு மலர்த்தாள்
வளங்கெழு மாடத்துக் களந்தையெம் பெருமான்
வளர்ந்த கீர்த்தி வச்சணந்தி தேவன்
என்னும் மாமுனி செய்வித் ததனால்
வச்சணந்தி மாலை யென்னும் பெயர்த்து.

யாப்பென்பது தொகுத்தும், விரித்தும், தொகை விரிப்படுத்தும், மொழிபெயர்த்து மாக்கல். அவற்றுள், இஃது எவ்வாறாக்கப்பட்டதோ வெனின் : தொகுத்தாக்கப்பட்டது.

நுதலிய பொரு ளென்பது: எடுத்துக்கொண்ட பொருள் இன்னதென்றல். இஃது எடுத்துக்கொண்ட பொருள் யாதோவெனின் : பாட்டியன் மரபு.

கேட்போ ரென்பது நூலாய்வார். இப்பாட்டிய லாய்ந்தோர் யாரோ வெனின் :

" சிங்கா வண்புகழ் செறிபொழிற் றிருமலைப்
பங்கய மலர்த்தாட் பண்டித" ரென்னும்

முனிவர் ஆய்ந்தாரென் றுணர்க.

பய னென்பது இன்ன பயக்குமென்றல். இந்நூல் ஓத என்ன பயக்குமோவெனின்: அறம், பொருள், இன்பம், வீடென்னும் நான்கினையும் பயக்கும் ;

" அறம்பொரு ளின்பம்வீ டடைதனூற் பயனே" என்றார் பிறரும்.

காலமென்பது இன்னார் காலத் திந்நூல் செய்த தென்றல். இந்நூல் யார் காலத்துச் செய்ததோ வெனின் :

வெ- பா.—2

குருத்தவா மணிமுடிக் கொற்றவர் கோமான்
திருத்தகு மணிமுடித் திரிபுவன தேவன்

என்னும் அரசன் காலத்திற் செய்ததென் றுணர்க.

களம் என்பது நூல் கேட்பித்த நின்று ரவைக்களத் தென்றல். இந்நூல் கேட்பித்தது யாரவைக்களத்து எனில்: கடவுண் முதலிய நற்சங்கத்தா ரவைக்களத்தென் றுணர்க.

காரணமென்பது நூல் செய்தற்குக் காரணமின்னதென்றல். இந்நூல் யாது காரணமாகச் செய்யப்பட்டதோ வெனின்: பரந்த பாட்டியன் மரபுகளிற் கரந்து கிடந்த பொருளை யெல்லாம் ஒரு கோவைப்படுத்தல் காரணமென் றுணர்க.

சிறப்புப்பாயிர மென்பது தானுணர்த்திய வெழுந்த அந்நூற்கு இன்றியமையாதது. இந்நூற்குச் சிறப்புப் பாயிரம் யாதோ வெனின்:

வெண்பா

"பண்பார் கவிஞர் வியந்தேத்தப் பாட்டியலாம்
வெண்பாவந் தாதி விளம்பினான்—நண்பாரும்
கோடாத கீர்த்திக் குணவீர பண்டிதனும்
பீடார் களந்தைப் பிரான்"

என் றுணர்க.

இந்நூலுள் இவ்வாதியியல் என்ன பெயர்த்தோவெனின்: முதன் மொழியிலக்கண முணர்த்தினமையின், முதன் மொழி யியல் என்னும் பெயர்த்து. அற்றேல், எடுத்த சூத்திரந் தொடுத்த பொருள் யாதோவெனின்: தெய்வ வணக்கமும், அதிகாரமு முணர்த்துதல் நுதலிற்று. 'மதிகொண்ட......தொழுது' எனத் தெய்வ வணக்கங் கூறப்பட்டது. 'பாட்டியலைக் கட்டுரைப்பன்......தொகுத்து' என அதிகாரங் கூறப்பட்டது. 'நுதிகொண்ட பல்கதிர்வே லுண் கண்ணாய்' என்பது மகடூஉ முன்னிலை. இந்நூலுட் சில செய்யுளில் மகடூஉ முன்னிலை வரும்.

(விளக்கம்.) ''வழிபடு தெய்வ வணக்கஞ் செய்து
மங்கல மொழிமுதல் வகுத்
தெடுத்துக் கொண்ட விலக்கண விலக்கிய
மிடுக்கணின்றி யினிது முடியும்''

என்பதனு லுணர்க. (க)

பாயிரம் முற்றிற்று.






## முதன் மொழியியல்

### வெண்பா

தொகுத்துரைத்த மங்கலஞ் சொல்லெழுத்துத் தானம்
வகுத்தபா லுண்டி வருணம்—பகுத்தநாள்
தப்பாக் கதிகணமென் றீரைந்தின் தன்மையினைச்
செப்புவதா முன்மொழியின் சீர்.

(என்பது சூத்திரம் என்னுதலிற்றோ வெனின்): உரிய வோத்தினுள் ஒன்றும் பொருள் இவை யெனப் பெயரும், முறையும், தொகையு முணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மங்கல முதலாகக் கணமீறாகக் கிடந்த பத்தினை யுஞ் சொல்வது முதன்மொழியின் தன்மை எ - று.

இப் பத்தினையும் தத்தம் இலக்கணமுரைக்குஞ் சூத்திரத் துள்ளே காட்டுதும்.

(வி - ம்.) மங்கலப்பொருத்தம், சொற்பொருத்தம், எழுத்துப் பொருத்தம், தானப்பொருத்தம், பாற்பொருத்தம், உணாப் பொருத்தம், வருணப்பொருத்தம், நாட்பொருத்தம், கதிப் பொருத்தம், கணப்பொருத்தம் எனப் பொருத்தம் பத்துங்காண்க.

தொகுத்துரைத்த - தொகுத்துச் சொன்ன. வகுத்த - வகுத் துரைத்த. பகுத்த - பகுத்துரைத்த. தப்பா - தவறாத. முன் மொழி - முதன் மொழி. மங்கலம் - சீர்முதலாகிய மங்கலச் சொற் கள். சொல் - மூவகைச் சீரியவாகிய சொற்கண் வகையுளி சேர்தல் முதலாகிய சொற்கள். எழுத்து - ஒற்றைப்பட வருவனவாகிய விய னிலை எழுத்தும், இரட்டைப்பட வருவனவாகிய சமனிலை எழுத்தும்; அவை முறையே மூன்று முதலாயின நான்கு முத லாயின. தானம் - பாலன் முதலிய ஐவகைத் தானம். பால் - ஆண், பெண், அலியாகிய பால். உண்டி (உணா) - அமுத வெழுத்து. நஞ்செழுத்து. வருணம் - மறையோர் முதலிய நான்கு வருணத் தவர். நாள் - நட்சத்திரம். கதி - தெய்வகதி முதலிய நாற்கதி. கணம் - நீர் முதலிய எண் கணம். (உ)

## க. மங்கலப் பொருத்தம்

சீரெழுத்துப் பொன்பூ திருமணிநீர் திங்கள்சொற்
கார்பரிதி யானை கடலுலகம்—தேர்மலைமா
கங்கை நிலம்பிறவுங் காண்டகைய முன்மொழிக்கு
மங்கலமாஞ் சொல்லின் வகை.

(எ - ன்): நிறுத்தமுறையே முற்கூறிய பத்தனுள் அடுத்த மங்கல மாராய்தல் நுதலிற்று.

(இ - ள்.) சீர்முதலாக நிலமீறாக எண்ணப்பட்ட பத்தொன் பதும் பிறவும் முதன்மொழி யிடத்தே நிற்றற்குரிய மங்கலச்சொல் லினது கூறுபாடாம் எ - று.

பரியாய நாமம் வரினும் இழுக்காது.

(வி - ம்.) சீர், எழுத்து, பொன், பூ, திரு, மணி, நீர், திங்கள் சொல், கார், பரிதி, யானை, கடல், உலகம், தேர், மலை, மா, கங்கை, நிலம். பிறவும் - பிறசொற்களும். அவையாவன: வாழி, மாலை, சங்கு, தார், கவி, கயல், சுடர், முரசு, கவரி, தோகை, நன்று, தாமரை, விளக்கு, மலர், பழனம், இடபம், செல்வம், ஞாயிறு, புயல், புனல், களிறு முதலாயின. பரியாய நாமம்: சீர் - சிறப்பு, எழுத்து-இளவி, பொன் - பொலம், பூ - மலர் முதலாயின. பரியாய மாவது: ஒரு சொல்லின் பொருளைக் குறிக்கும் மற்றொரு சொல். (௩)

## உ. சொற் பொருத்தம்

வகையுளி சேர்தல் வனப்பின்றாய் நிற்றல்
தொகையார் பொருள்பலவாத் தோன்றல்-தகையில்
பொருளின்மை யீறு திரிதலே போல்வ
தருமுதற்சீர்ச் சொற்காகுந் தப்பு.

(எ - ன்): முன்மொழிக் காகாத சொல் இன்னதென் றியம்புதல் நுதலிற்று.

(இ - ள்.) முதலெடுத்துக்கொண்ட மூவசைச்சீரியவாகிய சொற்கள் மங்கலத்த வாயினும், வகையுளி சேர்ந்தனவும், சிறப்பில் சொல்லும், பலபொருட்கேற்றசொல்லும், பொருளில்சொல்லும்,

தோன்றல் திரிதல் கெடுத லென்னும் விகாரவிறுதிச் சொல்லும் முன் வைக்கப்படா எ - று.

எனவே, அல்லன யாவையுஞ் சொல்லற்பாலன என்றுணர்க.

(வி - ம்.) வகையுளியாவது: செய்யுளில் பொருள் நோக்காது ஓசையே நோக்கி அசை, சீர், தளை முதலியன பிசகின்றி நிற்கு மாறு முன்னும் பின்னும் குற்றப்படாமல் தளைபிரித்தல் அல்லது அலகிடுதலாம். இதனை, "அசையுஞ் சீரு மடியு மெல்லா, மிசைய வருபொரு ளியைபு நோக்கா, தோசையே குறிக்கொண் டொடுங் கவும் விரியவும், அலகிடல் வகையுளி யாகு மென்ப" என வரும் இலக்கண விளக்க நூலா னுணர்க.

"விழுப்பொருள் தோன்றல் வேறுபல் பொருளின்
ஒழுக்கல் வகையுளி யுறுத லீறு
திரித லின்றிச் செய்வது சொல்லே". (இலக். விள-பாட். கஉ)

என்பதனாலு முணர்க. (ச)

## ரு. எழுத்துப் பொருத்தம்

தப்பாத மூன்றைந்தே ழொன்பான் தவறிலவென்
றெப்பா முதற்சீர்க் குரைசெய்வர்—செப்புங்கால்
தண்டாத நான்காறெட் டாகா தவிர்கென்று
கொண்டா ரெழுத்தின் குறி.

(எ - ன்): முன்மொழி எழுத்திலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒற்றுட்பட மூன்றும், ஐந்தும், ஏழும், ஒன்பது மாகிய எழுத்தான் முதன்மொழிக்கு வருவது நன்று; நான்கும், ஆறும் எட்டுமாகிய எழுத்தான் முதன்மொழிக்கு வருவது தீது எ - று.

இரண்டெழுத்து ஆராயாது விட்டது எற்றுக்கெனின் "முன் மொழியாகலான் மூவசைச் சீரல்லன, நன்மைசால் தெய்வ நவி லாமை" என்னு மிதனான் மறுக்கப்பட்டது. ஒற்றுட்பட என்பது எற்றாற் போததெனின் ஒற்றொழிந் தொன்பதெழுத்தான் வருவ தொரு மூவசைச்சீர் இன்மையின் என்க. ஒற்றைப்பட வருவன வியனிலை. இரட்டைப்பட வருவன சமனிலை.

(வி - ம்.) வியனிலை: ஒற்றை யெழுத்தின் நிலை. சமனிலை: இரட்டை யெழுத்தின் நிலை. முதற்சீர், வியனிலையாகிய மூன்று,

ஐந்து, எழு அல்லது ஒன்பதெழுத்தாலாகி, சமனிலையான இரண்டு, நான்கு, ஆறு அல்லது எட்டு எழுத்துக்களா லாகாமல் வருவது எழுத்துப்பொருத்த மாகும்.

உலகம், அமுதம், ஆரணம், எழுத்து என்பன போலச் சமனிலையாகி வரினும் மங்கலச் சொல்லா யிருப்பின் தவறாகாது.

"ஐந்தொடு மூன்றே மூவொரு மூன்றும்
ஆகும்மா லாறெட் டெழுத்தா காவே"

என்பதனு லறிக. இச்சொற்களை ஒற்றுடன்சேர்த்து எண்ணல் வேண்டும். என்னை, "ஒற்றுட னெண்ணி" என்றார் பிறரும். (ரு)

## ச. தானப் பொருத்தம்

குறிலைந்துந் தந்நெடில்கொண் டிஉஐ ஒளசேர்ந்
தறிபால னாதியா வைந்து—மிறைவன்பேர்
முன்னெழுத்துப் பாலனில்வைத் தெண்ணிமூப் பேமரணம்
என்னுமிவை தீதென்றே யெண்.

(எ - ன்): ஐவகைத் தானமும் மெய்வகையாக விரித்தல் நுதலிற்று.

(இ - ள்.) குற்றெழுத் தைந்தோடுந் தமக்கொத்த நெடிலைச் சேர்த்து, இ உக்கள் நின்ற தானத்து முறையே ஐகார ஒளகாரங் களைச் சேர்த்தால், உயிரும், உயிர்மெய்யு மென்று சொல்லப்பட்ட தொகை யெல்லாம் ஐந்து கூறு யடங்கும். இவற்றைப் பாட்டுடைத் தலைமகன் இயற்பெயரின் முதலெழுத்தின் கூற்றைத் தொடங்கிப் பாலன், குமரன், இராசன், மூப்பு, மரணமென வருவித்தால், அவற்றுள் மூப்பும், மரணமு மாகா. அல்லன முதற்சீரின் முதலெழுத்தாய் வருவன நன்கு எ - று.

(வி - ம்.) குற்றெழுத்து ஐந்து என்றது அ, இ, உ, எ, ஒ என்பனவற்றை. தமக்கொத்த நெடில் என்றது ஆ, ஈ, ஊ, ஏ, ஓ என்பனவற்றை. இகர நின்ற தானத்தில் ஐகாரத்தையும், உகர நின்ற தானத்தில் ஒளகாரத்தையும் சேர்த்துக்கொள்க. ஐந்து கூறுவன: பாலன், குமரன், இராசன், மூப்பு, மரணம் என்பன. அல்லன: பாலன் முதலிய மூன்று. இனி, குற்றெழுத்தைந்துடன் அவற்றிற் கினமாகிய நெட்டெழுத் தைந்தையும் தனித்தனி சேர்ப்பதோடு, ஐகார ஒளகாரங்களையும் இகர உகரங்களோடு

சேர்த்து; அ, ஆ-பாலன்; இ, ஈ, ஐ-குமான்; உ, ஊ, ஔ-இராசன்; எ, ஏ - மூப்பு; ஒ, ஓ - மரணம் என்னுந் தானங்களாக வகுத்து; தலைவன் பெயரின் முதலெழுத்தைப் பாலதானமாகக் கொண்டு மங்கலச்சொல்லின் முதலெழுத்தோடு எண்ணிப் பார்க்கும்போது, அது பின்னிரண்டு தானங்களாகிய மூப்பு, மரண மென்பவற்றில் ஒன்றாய் வரின் தீமை எனத் தள்ளலும், முன் மூன்று தானங்களாகிய பாலன், குமான், இராசன் என்பவற்றுள் ஒன்றாய் வரின் நன்மை யெனக் கொள்ளலுந் தானப்பொருத்தமாகும்.

உயிர்மெய் யாயினும் இவ்வாறே கொள்ளப்படும்.

"அ ஆ இ ஈ ஐயும் உ ஊ
ஔவும் எ ஏ ஒ ஓ என்றிவை
பாலன் குமா னிராசன் மூப்பு
மரண முறையே யைந்து மெண்ணுக
மூப்பு மரணமும் முதற்சீர்க் காகா"

என்றார் பிறரும்.

பறவைநூல் பழகினவருக்கு இதன் வகை விளங்கும். (சு)

## ரு. பாற் பொருத்தம்

எண்ணுங் குறிலா ணியைந்த நெடிலெல்லாம்
பெண்ணாகு மொற்றாய்தம் பேடாகும்—பெண்ணினோ
டாண்புணர்ச்சிக் கவ்வவ் வெழுத்தே மயங்கினுமா
மாண்பில்பே டென்றார் மதித்து.

(எ - ன்): பாவிலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) குற்றெழுத்தெல்லாம் ஆண்பா லெழுத்தாம். நெட்டெழுத்தெல்லாம் பெண்பா லெழுத்தாம். ஒற்றெழுத்தும், ஆய்த வெழுத்தும் அலி யெழுத்தாம். ஆண்பாலைப் புகழுமிடத்து ஆணெழுத்துச் சிறப்புடைத்து. பெண்பாலைப் புகழுமிடத்துப் பெண்ணெழுத்துச் சிறப்புடைத்து. மயங்கிவந்த வெனினும் வரையப்படா. அலி யெழுத்து முன்னிற்குந் தகைமைய வல்ல எ - று.

முதன்மொழி யென்பது அதிகாரத்தாற் கொள்க.

(வி - ம்.) ஒற்றெழுத்து - புள்ளி யெழுத்து. பேடு - அலி. வரையப்படா-நீக்கப்படா; எனவே கொள்ளவேண்டும். முதன் மொழி என்றது முதற்சீரை.

"ஆடூஉக் குறினெடி லாகு மகடூஉப்
பேடொற் றுய்தம் பெண்ணாண் புகழ்ச்சிக்
கவ்வெழுத் து மயங்கினும் அமையு மென்ப"

என்றார் இலக்கண விளக்க நூலார்.

இனி, ஆண்பாலுக்குப் பெண்பாலெழுத்தும் பெண்பாலுக்கு ஆண்பாலெழுத்தும் மாறி வரின் வழுவாம் என்பது சிலருடைய கொள்கை.

"குறிலா ணெடில் பெண்ணாந்தனி நிலமெய்
அலியாம் பெண்ணினோ டாண்பாற் புணர்ச்சிக்
கவ்வவ் வெழுத்தாம் மயங்கினும் வழுவே"

என்றார் பிறரும். (எ)

## அ. உணுப் பொருத்தம்

மதித்த கசதநப மவ்வோடு வவ்வும்
உதித்தமைந்த நாற்குற் றுயிரும்—துதித்தமுதென்
றுதி மொழிக்குந் தசாங்கத் தயலுக்குந்
தீதிலவே யென்றார் தெரிந்து.

(எ - ன்): உண்டி இரண்டு முணர்த்திய வெழுத்தா லவற்றுட் கொண்ட அமுத வெழுத்துக் கூறுதல் நுதலிற்று.

உண்டி யிரண்டும் உணர்த்திய எழுத்து - உணாவாகிய அமுது நஞ்சுமாக வுணர்த்திய இரண்டு எழுத்து.

(இ - ள்.) கசதநபமவவ்வென்னும் ஒற்றுக்க ளேழும், அ இ உ எ என்னும் நான்கு குற்றுயிரும் அமுத வெழுத்தாம். அவை மொழிமுதலும், தசாங்கத்தயலும் வழங்கு மரபினவாம் எ - று.

(வி - ம்.) 'ஒற்றுக்கள் எழும்' என வுரைகூறினு ராயினும் மெய் மொழி முதல் வாராமையால், உயிர்மெய் யெனக் கொள்க.

"கசதந பமவ ஏழொடும் அகரம்
இகர முகர மெகர நான்கும்
அமுத வெழுத்தென் றறைந்தனர் புலவர்"

(இலக். விள - பாட். கசு)

என்பதனு லறிக.

அவை: அ, இ, உ, எ, க, ச, த, ந, ப, ம, வ.

மொழிமுதல் என்றது முதற்சீராகிய சொல்லை. அயல் - இடத்து. தசாங்கமாவன மலை, நதி, நாடு, ஊர், தார், குதிரை, யானை, கொடி, முரசு, ஆக்கினை ஆகிய இவை பத்தும். (அ)

தெரிந்த யரலமேற் சேர்ந்தவா வோவும்
புரிந்தவற் றொற்றுய்தப் புள்ளி—விரிந்த
அளவொடுகான் மாத்திரையு மாமென் றறிந்தோர்
உளவென்றார் நஞ்சென் றொழி.

(எ - ன்): எஞ்சி நின்ற நஞ்செழுத்து நவிலுதல் நுதலிற்று.

(இ - ள்.) கூறிய யரலக்கள் மேலேறிய ஆகார, ஓகாரமும், யரல என்னும் ஒற்றும், ஆய்தப் புள்ளியும், ஒற்று உயிரென்னும் அளபெடை யிரண்டும், மகரக் குறுக்கமும் ஆய்தக்குறுக்கமுமாகிய பதினுன்கும் நஞ்செழுத்தாம். அவை ஆதி மொழிக்கும் தசாங்கத் தயலுக்கு மாகா எ - று.

முதற்சீராகிய மங்கலச் சொல்லின்கண் நஞ்செழுத்து வந்தன வாலோ வெனின், "நஞ்சு மமுதமா மங்கலம் புகினே" என்பவாக லின், மூவகைச் சீருள் மங்கலச் சொல்லொழியக் கொள்க. நஞ்சினு மமுதினு நாட்டப்படாவாகி யெஞ்சி நின்ற உயிரும், உயிர்மெய்யும், மெய்யும் எப்பாற்பட்ட வெனின்,

"அமுதெழுத் தென்ற ஆதியுயிர் நான்கொடும்
புணர்ந்த மெய்யை யுணர்ந்தமு தென்ப"

"மெய்யா மமுதின் மேவிய வுயிரும்
பொய்தீர் புலவர் பொருந்தின வென்ப"

"நஞ்சா மொற்றொடு நடந்த வுயிர்களும்
வஞ்சமில் புலவர் மறுத்தில ரென்ப"

"இருவகை யுண்டியென் றெடுத்தன வல்ல
தாமே நிற்பினும் தோமில வென்ப"

என்பன இந்திரகாளி.

(வி - ம்.) நஞ்செழுத்து யா, யோ, ரா, ரோ, லா, லோ, ளா, ளோ, ய், ர், ல், ள், ஃ, அளபெடை, மகரக்குறுக்கம் என்பன

வாம். இவற்றுள் முதற்சீர்க்கண் சுபமுண்டாக நஞ்செழுத்தை நீக்கிப் பாடவேண்டும். இஃது உண்டிப் பொருத்தமாம்.

நஞ்செழுத்து வைத்துச் சபித்துப் பாடிய பாடல் அறக்கவியெனப்படும். காளமேகப்புலவர், கயிற்றுறு, ஆற்றூர், ஆறுமுக மங்கலம் என்ற கிராமங்களைச் சபித்துப் பாடிய கவிகளைத் தனிப்பாடற்றிரட்டிற் பார்க்க. அன்றியும் நஞ்செழுத்து வரினும் மங்கல மொழியாயின் குற்றமாகாது.

"யரலள வென்னு மெழுத்தினை யூர்ந்த
ஆவும் ஓவும் அந்நாற் புள்ளியும்
ஆய்தமும் மஃகான் குறுக்கமும் அளபும்
எய்தா நஞ்சென் றிகழ்ந்தனர் புலவர்." (இலக். விள-பாட். உ0)

(கூ)

## எ. வருணப் பொருத்தம்

ஒழியா வுயிரனைத்து மொற்றுமுத லாறும்
அழியா மறையோர்க்கா மென்பர்—மொழியும்
அடைவேயோ ராறு மரசர்க்கா மென்பர்
படையாத சாதிகளின் பண்பு.

(எ - ன்): வருண நான்கனுள் மறையோர் சாதியும், அரசர் சாதியும் அறைதல் நுதலிற்று.

(இ - ள்.) உயிர் பன்னிரண்டும், ஒற்றுமுதலாறும், பயிலுந் தன்மைப் பார்ப்பனசாதி. அல்லா மெய்யி னடைவேயாறும், மல்லார் புயத்து மன்னர் சாதி எ - று.

(வி - ம்.) ஒற்று முதலாறு: க, ங, ச, ஞ, ட, ண. அல்லா மெய்யின் அடைவு ஆறு: த, ந, ப, ம, ய, ர. (க0)

பண்பார் வணிகர்க்காம் பாங்கி லவறனக்கள்
மண்பாவுஞ் சூத்திரர்க்கா மற்றையவை—நண்பால்
அரனரிசேய் மால்கதிர்கூற் றுய்மழைபொன் மெய்க்கும்
பிரமன் படைப்புயிர்க்குப் பேசு.

(எ - ன்): அல்லா வருண மிரண்டு முணர்த்திச் சொல்லாப் படைப்புஞ் சொல்லுதல் நுதலிற்று.

(இ - ள்.) ல வ ற ன என்னும் நான்கு மெய்யும் வணிகர் வருணமாம். ழ ள வென்னும் இரண்டுஞ் சூத்திர வருணமாம். அரன், அரி, செவ்வாய், புதன், இரவி, மதி, இயமன், வருணன், வியாழம் என்னும் ஒன்பது புத்தேளிரும் முறையே இரண்டிரண்டாகப் பதினெட்டு மெய்யும் படைத்தார். பன்னீருயிரும் பிரமன் படைத்தான் எ - று.

இச் சூத்திரத்துட் கதிரெனப் பொதுப்படக் கூறியது, கதிரிரண்டுங் கோடற்கு. படைப்பை அதிகாரத்தாற் றழீஇக்கொள்ளாது எடுத்தோதித் தொடுத்தமை படைப்பு வேண்டாமை முதனூல் தழுவிற்றாகலானும், 'பிறர் நூன் முடிந்தது தானுடன் படுதலானு' மென்ப. அன்றியும், இவ்வெழுத்துக்கட்குத் தெய்வம் அவ்வவர்களெனக் கொள்ளப்பட்டதெனினு மமையும்.

(வி - ம்.) அரன் - சிவன். அரி - திருமால். சேய்-செவ்வாய். மால் - புதன். கதிர் - இரவி, மதி. கூற்று - இயமன். மழை - வருணன். பொன் - வியாழம். புத்தேளிர் - தேவர். மற்றையவை - ழ ள என்னும் இரண்டெழுத்துக்கள்.

உயிரெழுத்துப் பன்னிரண்டும், க ங ச ஞ ட ண என்னும் ஆறு மெய்யும் அந்தணர்க்கும்; த ந ப ம ய ர என்னும் ஆறு மெய்யும் அரசர்க்கும்; ல வ ற ன என்னும் நான்கு மெய்யும் வணிகர்க்கும்; ழ ள என்னும் இரண்டு மெய்யும் சூத்திரர்க்கும் உரியன வாதலின், முதற் சீர்க்கண் அவ்வவ் வருணத்திற்குத் தக்கபடி அவ்வவ்வெழுத்து வரின் வருணப் பொருத்தமாகும்.

குறிப்பு :—விலக்கப்பட்ட நஞ்செழுத்துக்கள் வருணத்துக்குப் பொருத்தமாக வரின் இழுக்காகாது.

"பன்னீ ருயிரும் முன்னெற் றாறும்
மன்னிய வந்தணர் வருண மாகும்." (இலக். விள - பாட். கச)

"தநபம யரவெனச் சாற்றிய வாறும்
மனமகி ழரசர் வருண மாகும்." (இலக். விள - பாட். கரு)

"லவறன வென்னு நான்கு புள்ளியும்
இவர்தரு வணிகர்க் கெய்து மென்ப. (இலக். விள-பாட். கசு)

"ழளவெனு மிரண்டும் வளமையர்க் காகும்." ( ,, -பாட். கஎ)

(கக)

## அ. நாட்பொருத்தம்

பேசு முயிரடைவே நான்காரல் பின்னைந்து
மாசிலாப் பூராட மற்றொருமூன்—ருசிலாப்
பேருத்தி ராடமா மென்று பெரிதுணர்ந்தோர்
பாரித்தார் நாளின் பரிசு.

(எ - ன்): எழிய முதலெழுத்திற்குநாளிசைப்புழி ஆநீருயிர்க்கும் நாள் அறிவித்தல் நுதலிற்று.

(இ - ள்.) அ ஆ இ ஈ என்னும் நான்குயிருங் கார்த்திகை. உ ஊ எ ஏ ஐ என்னு மைந்தும் பூராடம். ஒ ஓ ஔ என்னு மூன்றும் உத்திராடமாம் எ - று.

(வி - ம்.) முதலெழுத்து என்றது உயிரும் உடம்பும். ஆரல்-கார்த்திகை. நாள் - நட்சத்திரம். (கஉ)

பரிசுடைய கவ்வரியி னான்கிரண்டு மூன்றுந்
தெரிவுடைய மூன்றடைவே செப்பிற்—பிரிவுடைய
ஓணமே யாதிரையே யொண்புனர்பூ சம்பூசம்
பேணி யுரைத்தார் பிரித்து.

(எ - ன்): கவ்வருக்க நாளுரைத்தல் நுதலிற்று.

(இ - ள்.) க கா கி கீ என்னும் நான்குந் திருவோணம், கு கூ என்னும் இரண்டுந் திருவாதிரை, கெ கே கை என்னும் மூன்றும் புனர்பூசம், கொ கோ கௌ என்னு மூன்றும் பூசமாம் எ-று. (கங)

பிறிந்த சகரத்து நான்கைந்து பின்மூன்
றறிந்த கலமுதன்மூன் ருகுஞ்—செறிந்த
ஞகரத் தொருமூன்று நன்குணர்ந்தோ ராய்ந்த
புகர்தி ரவிட்டமாம் போற்று.

(எ - ன்): சகர ஞகர வருக்கங்களுக்கு நாளுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ச சா சி சீ என்னும் நான்கும் இரேவதி, சு சூ செ சே சை என்னும் ஐந்தும் அச்சுவினி, சொ சோ சௌ என்னும் மூன்றும் பரணி, ஞ ஞா ஞெ என்னு மூன்றும் அவிட்டமாம் எ - று.

(வி - ம்.) கலம் முதல் மூன்று என்றது இரேவதி, அச்சுவினி, பரணி என்பவற்றை. கலம் - இரேவதி. 'ஞகரத்து ஒரு மூன்று' என்றாரேனும்,

"உற்ற ஞகரத் தொரு மூன் றினையும்
மற்றை யவிட்ட மாமெனப் பகர்வர்"

(இல - விள - பாட். உக)

என இலக்கண விளக்க நூலார் கூறிய சூத்திரத்தினுள் 'மற்றை' என மிகுத்துச் சொன்னமையால், ஞே ஞொ என்பதையும் கொள்க. 'புகர் தீர்' என்றது, அவிட்டத்திற்கு அடைமொழி என்க. புகர் - குற்றம். (கச)

போற்றுந் தகரமிரண் டேழ்மூன் றும் பொய்தீர்ந்தோர்
சாற்றுவர் சோதி முறஞ்சதயம்—வேற்றனுடங்
கேட்டைபூ ரட்டாதி கேணகரத் தோராறும்
வாட்டமிலா மும்மூன் றும் வந்து.

(எ - ன்): தகர நகர வருக்கங்களுக்கு நாள் உரைத்தல் நுதலிற்று.

(இ - ள்.) த தா என்னும் இரண்டும் சோதி, தி தீ து தூ தெ தே தை என்னும் ஏழும் விசாகம், தொ தோ தௌ என்னும் மூன்றும் சதயம், ந நா நி நீ நு நூ என்னும் ஆறும் அனுடம், நெ நே நை என்னும் மூன்றும் கேட்டை, நொ, நோ, நௌ என்னும் மூன்றும் பூரட்டாதியாம் எ - று.

(வி - ம்.) முறம் - விசாகம். வேறு அனுடம் - வேறாகிய அனுடம். கேள் + நகரம் + அத்து. கேள் - கேட்பாய். ஓர்ஆறும் என்புழி ஓர் தமிழ்க்குரிய அடை. மூன்று + மூன்று = மும்மூன்று. (கரு)

வந்த பகரத்து நான்கிரண்டா றுத்திரந்தொட்
டந்தமிலா மூன்ருகு மவ்வடைவே—வந்ததற்பி
னுறுமக மூன்றுடன்மூன் றுயிலியம் பூரமா
மாறின் மகரத்தின் மாட்டு.

(எ - ன்): பகர வருக்கத்திற்கும், மகர வருக்கத்திற்கும் நாள் உரைத்தல் நுதலிற்று.

(இ - ள்.) ப பா பி பீ என்னும் நான்கும் உத்திரம், பு பூ என்னும் இரண்டும் அத்தம், பெ பே பை பொ போ பௌ என்னும்

ஆறும் சித்திரை, ம மா மி மீ மு மூ என்னும் ஆறும் மகம், மெ மே மை என்று மூன்றும் ஆயிலியம். மொ மோ மௌ என்னும் மூன்றும் பூரமாம் எ - று.

(வி - ம்.) உத்திரங் தொட்டு அந்தமிலா மூன்றுக்கும் என்றது உத்திரம், அத்தம், சித்திரை என்னும் அழிவில்லாத மூன்று நட்சத்திரங்களே. மாறில் மகரத்தின் மாட்டு அவ்வடைவே வந்ததற்பின் - மாறுபாடில்லாத மகர வருக்கத்தினிடத்து அம்முறையே வந்ததற் பிறகு. ஆறு மகம், மூன்று ஆயிலியம், மூன்று பூரமாகும். (கசு)

மாட்டும் யகரத்துள் யாவுத் திரட்டாதி
ஈட்டியயூ காரயோ காரங்கள்—காட்டிய
மூலம் வகரத் தொருநான்கு ரோகணிமான்
தோலாத நான்கெனவே சொல்.

(எ - ன்): யகர வகர வருக்கங்களுக்கு நாள் உரைத்தல் நுதலிற்று.

(இ - ள்.) யா ஒன்றும் உத்திரட்டாதி யூ யோ என்னும் இரண்டும் மூலம், வ வா வி வீ என்னும் நான்கும் உரோகணி, வெ வே வை வௌ என்னும் நான்கும் மிருகசிரமாம் எ - று.

(வி - ம்.) மாட்டுதல் - இயலுதல். ஈட்டல் - சேர்த்தல். காட்டல் - தெரிவித்தல். மான் - மிருகசிரம்; மான் என்றது பின்மொழி கெட்ட முன்மொழி நிலையலாய் மான்றலையை யுணர்த்திற்று. (மான்றலை - மிருகசீரிடம்.)

## நாட் பொருத்தம்

| | | | |
|---|---|---|---|
| அ, ஆ, இ, ஈ, | ... | கார்த்திகை | எழுத்து |
| உ, ஊ, எ, ஏ, ஐ | ... | பூராட | ,, |
| ஒ, ஓ, ஔ | ... | உத்திராட | ,, |
| க, கா, கி, கீ | ... | திருவோண | ,, |
| கு, கூ | ... | திருவாதிரை | ,, |
| கெ, கே, கை | ... | புநர்பூச | ,, |
| கொ, கோ, கௌ | ... | பூச | ,, |
| ச, சா, சி, சீ, | ... | இரேவதி | ,, |
| சு, சூ, செ, சே, சை | ... | அசுவினி | ,, |
| சொ, சோ, சௌ | ... | பரணி | ,, |
| ஞ, ஞா, ஞெ, ஞே, ஞொ | ... | அவிட்ட | ,, |

| | | | |
|---|---|---|---|
| த, தா | ... | சோதி | எழுத்து |
| தி, தீ, து, தூ, தெ, தே, தை | ... | விசாக | ,, |
| தொ, தோ, தௌ | ... | சதய | ,, |
| ந, நா, நி, நீ, நு, நூ | ... | அனுட | ,, |
| நெ, நே, நை, | ... | கேட்டை | ,, |
| நொ, நோ, நௌ | ... | பூரட்டாதி | ,, |
| ப, பா, பி, பீ | ... | உத்திர | ,, |
| பு, பூ, | ... | அத்த | ,, |
| பெ, பே, பை, பொ, போ, பௌ | ... | சித்திரை | ,, |
| ம, மா, மி, மீ, மு, மூ | ... | மக | ,, |
| மெ, மே, மை | ... | ஆயிலிய | ,, |
| மொ, மோ, மௌ | ... | பூர | ,, |
| ய, யா | ... | உத்திரட்டாதி | ,, |
| யூ, யோ | ... | மூல | ,, |
| வ, வா, வி, வீ | ... | உரோகணி | ,, |
| வெ, வே, வை, வௌ | ... | மிருகசிரிட | ,, |

(கஎ)

சொல்லியநாண் மூவொன்ப தாகத் துணிந்தொன்று
புல்லியமூன் றைந்தேழ் பொருந்தாவா—மல்லனவற்
றட்டம ராசி வயினு சியமிவையும்
விட்டொழித்தல் நன்றெனவே வேண்டு.

(எ - ன்): பாட்டுடைத் தலைவன் பெயர் முதலெழுத்தின் நாட்கும், மங்கலமொழி முதலெழுத்தின் நாட்கும் பொருந்துமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) சொல்லியநாள் இருபத்தேழையும், ஒன்பது ஒன்ப தாக மூன்று கூறுக்கிப் பாட்டுடைத் தலைமகன் இயற்பெயரின் முதலெழுத்தின் நாளைத் தொடங்கிக் கூறுகளை யெண்ண ஒன்று மூன்று ஐந்து எழ்வரிற் பொருந்தா. அல்லாத நாட்களுட் பாட்டு டைத் தலைவன் பெயர் முதலெழுத்தின் இராசி தொடங்கி எட் டாமிராசி நாட்களும் பொருந்தா. வயினுசிய மாகிய எண்பத்தெட் டாங்கால் நின்ற நாளும் பொருந்தா.

புல்லிய என்று மிகுத்துச் சொல்லியவதனுல், மூன்று மொன்பதின் மூன்றும் ஐந்தும் எழும் பொருந்துமெனக் கொள்க.

"மூன்று மொன்பதின் மூன்றைந் தேழும்
பொருந்து மென்று புகலுவர் புலவர்"

என்பது இந்திரகாளி.

(வி - ம்.) வயினாசியம் - ஓர் யோகம். தலைவன் அல்லது தலைவியின் பெயரின் முதலெழுத்தைப் பார்க்கின் அதற்குரிய நட்சத்திரம் இன்னதென விளங்கும். அது முதல் 27 நட்சத்திரத்தையும் எண்ணி, ஒன்பது ஒன்பதாய்ப் பிரிக்க, முதற் பிரிவு சன்மமும், 2 ஆம் பிரிவு அனுசன்மமும், 3 ஆம் பிரிவு உபசன்மமும் ஆகும்.

இவற்றில், 1, 3, 5, 7 என்ற எண்ணில் வந்த நாட்களைப் பொருத்தமில்லனவாகத் தள்ளி, 2, 4, 6, 8, 9 என்ற எண்ணில் வந்த நாட்களைப் பொருத்த முடையனவாகக்கொண்டு முதற் சீரையெடுத்துச் சொல்ல வேண்டும். இது நாட் பொருத்தமாம்.

ஆயினும் முதற் சீரோடு பொருத்த முடையனவாகக் கொள்ளும் நாட்களிலும், தலைவன் அல்லது தலைவி பெயரின் ஆதியெழுத்தின் இராசி தொடங்கி எட்டா மிராசியி னின்ற இரண்டேகால் நாளும், எண்பத் தெட்டாங்கால் நின்ற வைநாசிக நாளும் தள்ளத் தக்கனவே யாம். (கஅ)

## கூ. கதிப்பொருத்தம்

வேண்டுங் குறில்வன்மை யீரெழுத்தால் விண்ணோர்க்காம்
ஆண்ட நெடின்முதனுன் கந்தமொழித்—தீண்டிய
மென்மையா மக்கட் கிவையிரண்டு மெய்க்கதிக்கு
நன்மையா முன்மொழிக்கு நாட்டு.

(எ - ன்): ஓதிய நாற்கதி யுணர்த்திய வெழுத்தவற்றுள் இரண்டு மறிவித்தல் நுதலிற்று.

(இ - ள்.) அ இ உ எ என்னும் நான்கு குற்றுயிரும், க ச ட த ப வென்னும் ஐந்தொற்றும் தெய்வகதியாம். ஆ ஈ ஊ ஏ என்னும் நான்கு நெட்டுயிரும், ங ஞ ண ந ம என்னும் ஐந்து ஒற்றும் மக்கட் கதியாம். இவ்விரண்டு கதியெழுத்து முன்மொழிக்கு நன்மையுடையவாம் எ - று. (கக)

நாட்டிய ஓஔ யரலழ நல்வன்மைக்
கிட்டிய வந்த மிவைவிலங்காங்—காட்டா

தொழித்த நரகர்க்கென் ருேதிஞ ரின்ன
வெழுத்தாகா வாதி யிடை.

(எ - ன்): ஒழித்த கதியிரண்டு முணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒ ஓ என்னும் உயிரிரண்டும், ய ர ல ழ என்னும் இடை யொற்று நான்கும், வன்மையிறுதி யென்று சொன்ன றகரமும் விலங்கு கதியாம். காட்டா தொழிந்த ஐ ஔ என்னும் உயிரிரண்டும், வகர ளகர ணகர மென்னு மூன்ருெற்றும் நரகர் கதியாம். இக் கதி யிரண்டும் முதன்மொழியிடத்து வரப்பெரு வெனக் கொள்க எ - று.

(வி - ம்.) தீயனவாகிய விலங்கின் கதிக்குரிய ஒ ஓ ய ர ல ழ ற என்னும் எழெழுத்தும், நரகர் கதிக்குரிய ஐ ஔ வ ள ன என்னும் ஐந்தெழுத்து மாகிய பன்னிரண்டனையும் நீக்கி, நல்லன வாகிய தேவர் கதிக்குரிய அ இ உ எ க ச ட த ப என்னும் ஒன்ப தெழுத்தும், மக்கட்கதிக்குரிய ஆ ஈ ஊ ஏ ங ஞ ண ந ம என்னும் ஒன்ப தெழுத்து மாகிய பதினெட்டனுள், ஏற்பன, முதற் சீர்க்கண் முதலில் பொருந்திவருவது கதிப்பொருத்தமாகும். ஆகா வென்று விலக்கப்பட்ட கதிக்குரிய எழுத்தும் எடுத்துக் கொண்ட மங்கலச்சொல்லின் முதலெழுத்தாய்வரின் குற்ற மாகாது.

"அஇஉ எயொடு கசட தபவாம்
ஒன்பதுந் தேவர் கதியாம் ஆஈ
ஊஏ ஙஞண நமவா மொன்பதும்
மாந்தர் கதிஒ ஓய ரலழற
விலங்கின் கதிஐ ஔவொடு வளன
ஐந்தும் நரகர் கதியா மிவற்றுள்
முன்னவை நல்லன பின்னவை தீயன"

என்ருர் பிறரும். (உ0)

## கഠ. கணப் பொருத்தம்

ஆதி யிடையிறுதி முற்றுநே ராநிரையென்
ருேதுவர்நீர் தீமாக மொண்சுவர்க்கந்—திதிலோர்
சொற்ருர் மதிபரிதி கானிலமா நீர்மதியு
முற்ருகி யாமுன் மொழிக்கு.

(எ - ன்): எண்வகைக் கணமு முணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஆதிநேர், இடைநேர், இறுதிநேர், முற்றுநேர், ஆதிநிரை, இடைநிரை, இறுதிநிரை, முற்றுநிரை என்று கூறப்பட்ட கூவிளங்கனி, புளிமாங்கனி, கருவிளங்காய், தேமாங்காய், புளிமாங்காய், கூவிளங்காய், தேமாங்கனி, கருவிளங்கனியென்னும் எட்டும் முறையானே நீர், தீ, வானம், துறக்கம், மதி, பரிதி, காற்று, நிலம் என்னும் பெயரினை யுடைத்தாம்; இவற்றுள் நீரும், திங்களும், துறக்கமும், நிலமும் முதன்மொழிக்காகும்; ஒழிந்தன ஆகா எ - று.

துறக்கத்தை இபமான னென்பாருமுளர்.

(வி - ம்.) ஆதிநேர் - கூவிளங்கனி, இடைநேர் - புளிமாங்கனி, இறுதி நேர் - கருவிளங்காய், முற்றுநேர்-தேமாங்காய், ஆதிநிரை-புளிமாங்காய், இடைநிரை - கூவிளங்காய், இறுதிநிரை - தேமாங்கனி, முற்றுநிரை - கருவிளங்கனி.

இனி, ஆதிநேர் - கூவிளங்கனி - நீர்.
ஆதிநிரை - புளிமாங்காய் - திங்கள்.
முற்றுநேர் - தேமாங்காய் - துறக்கம் (இந்திர கணம்.)
முற்றுநிரை - கருவிளங்கனி - நிலம்.

இவை முதன்மொழிக்காகும்.

ஒழிந்தன

இடைநேர் - புளிமாங்கனி - தீ.
இறுதிநேர் - கருவிளங்காய் - வானம் (அந்தர கணம்.)
இடைநிரை - கூவிளங்காய் - பரிதி.
இறுதிநிரை-தேமாங்கனி - காற்று.

இவை முதன்மொழிக்காகா.

தீயனவாகும் கருவிளங்காயாகிய அந்தரகணமும், கூவிளங்காயாகிய சூரிய கணமும், தேமாங்கனியாகிய வாயுக்கணமும், புளிமாங்கனியாகிய தீக்கணமுமாகிய நான்கும் ஒழிய; நல்லனவாகும் தேமாங்காயாகிய இந்திர கணமும், புளிமாங்காயாகிய சந்திர கணமும், கருவிளங்கனியாகிய நிலக்கணமும், கூவிளங்காயாகிய நீர்க்கணமும் ஆகிய நான்கனுள் ஒன்று முதற் சீராய்ப் பொருந்துவது, கணப்பொருத்தமாகும்.

"தேமாங் காயிந் திரகணம் புளிமாங்
காய்சந் திரகணங் கருவிள மென்கனி

நிலக்கணங் கூவிளங் கனிநீர்க் கணமிவை
யாகுங் கருவிளங் காயர் தரகணங்
கூவிளங் காயிர விக்கணந் தேமாங்
கனிகாற் கணம்புளி மாங்கனி தீக்கணம்"

என்றார் பிறரும்.

"நீரது கணமே சீர்சிறப் பெய்தும்
தீயின் கணமே நோயது சேரும்
அந்தர கணமே வாழ்நாள் அகற்றும்
இந்திர கணமே பெருக்கஞ் செய்யும்
சந்திர கணமே வாழ்நாள் தரூஉம்
சூரிய கணமே வீரியம் போக்கும்
மாருத கணமே சீர்சிறப் பகற்றும்
நிலக்கணந் தானே மலர்த்திரு விளங்கும்"

என்பது மாமூலம்.

"முற்பாட் டெடுப்பின் முதலீ ரசைச்சொல்
சொற்பான் மங்கலச் சொல்லொடு தோன்றி
நிற்பினுங் கொள்ளார் நெறியுணர்ந் தோரே"

என்று இந்திரகாளியாரும், இவ்வாறு பிறரும் கூறினாரேனும் "திருவளர் தாமரை," "அகர முதல," "திங்களைப் போற்றுதும்," என்றற் றொடக்கத்தனவாக ஆன்றோர் கூறி யிருத்தலின் மூவசைச் சீரேயன்றி ஈரசைச்சீரும் முதன் மொழியாக வரப்பெறு மெனக் கொள்க.

இவ்வாற்றால் கணப்பொருத்தம் நியமம் அன்று என்றாயிற் றென்க. ஈண்டுக் கூறிய பத்துப் பொருத்தங்களுள், மங்கலமும் சொல்லும் சொல் நோக்கியும், கணம் சீர் நோக்கியும், ஏனைய ஏழும் எழுத்து நோக்கியும் கூறினார் என்க. (உக)

முன்மொழி யாகலான் மூவசைச்சீ ரல்லன
நன்மைசால் தெய்வ நவிலாமை—முன்மொழிக்
கிட்டிய தொன்மை யிலக்கணங்க ளிவ்வகையே
காட்டு மகலக் கவிக்கு.

(எ-ன்): கணந்தரு சிறப்பின் காரண முணர்த்தி மணந்த பத்திலக்கணம் வருமிட முணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வெண்பா உரிச்சீரானும், வஞ்சி உரிச்சீரானும் வந்த எண்பெருங் கணங்கட்குந் தெய்வ மடுத்தமையிற் காட்டு முன் மொழியிடத்து, மூவசைச்சீர் நாட்டி யேனையவற்றை விலக்கிய தொல்லோ ரிலக்கணங்கள் மங்கல முதலாக, இவ்வகையே அம் மூவசைச் சீரின்கட் காட்டாநின்றன அகலக்கவிக்கு எ-று. (உஉ)

### வெண்பா

திருமங்கை நின்றகலாள் தெவ்வுநோய் நீங்கும்
தருமங்கள் நீங்கலாச் சார்வார்—இருநிலத்து
மன்னருள்ளார் தாழுந்தாள் வச்சணந்தி மாமுனிவன்
இன்னருளால் நோக்கு மிடம்.

முதன் மொழியியல்
முற்றிற்று.

---

## இரண்டாவது செய்யுளியல்

கவிகமகன் வாதியே வாக்கியெனக் காசில்
புவியின்மேல் நால்வர் புலவர்—கவிகடாம்
ஆசு மதுரமே சித்திரம்வித் தாரமெனப்
பேசுவார் நால்வர்க்கும் பேர்.

என்பது சூத்திரம்.

இவ்விய லென்ன பெயர்த்தோ வெனின்: செய்யு ளிலக்கண முணர்த்தினமையிற் செய்யுளிய லென்னும் பெயர்த்து. இச் சூத்திரம் நுதலிய பொருள் யாதோ வெனின்: பத்துவகை இலக்கணமும் வித்தார கவிக்கு வேண்டினர்; அவ் வித்தார கவிகளையும் ஒழிந்து நின்ற கவிகளையும் உணர்த்திய வேண்டிப் புலவரது பெயரும், முறையும், தொகையுங் கூறி, அவருள் முதற் புலவ ராகிய கவிகளுடைய பெயரு முணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) கவி, கமகன், வாதி, வாக்கி யெனப் புலவர் நால்வர்; அவருள் ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவி. எனக் கவிகள் நால்வர் எ - று.

(வி - ம்.) வித்தாரகவி - அகலக்கவி. (க)

### ஆசுகவி

பேரெழுத்திற் சொல்லிற் பொருளிற் பெருங்கவியிற்
சீரலங்கா ரத்திற் றெரிந்தொருவன்—நேர்கொடுத்த
உள்ளுரைக்* கப்போ துரைப்பதனை யாசென்றார்
எள்ளாத நூலோ ரெடுத்து.

(எ - ன்): நிறுத்த முறையானே ஆசுகவி பேசுதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்வெழுத்தாலே பாடுக, இச் சொல்லாலே பாடுக, இப்பொருளாலே பாடுக, இவ் யாப்பாலே பாடுக, இவ் வலங்காரத்தாலே பாடுக என்றொருவன் சொன்ன உள்ளுரைக்கு அவனெதிரே பாடப்படுவது ஆசுகவியாம் எ - று.

ஆசுகவி பாடும் புலவனும் ஆசுகவியாம்.

இவற்றில் இரண்டு மூன்று மகப்படப்பாடுதல் சிறப்புடைத்து.

(வி-ம்.) ஆசுகவி : ஒரு புலவன் மற்றொரு புலவனை நோக்கி, எழுத்து, சொல், பொருள், அணி, யாப்பு ஆகிய இவை இன்ன இன்ன விதமா யிருக்கும்படி பாடவேண்டும் என்று கேட்கும் போது உடனே அவை யாவும் அமைய முட்டின்றிப் பாடுவது.

உதாரணம் தனிப்பாடற்றிரட்டு முதலியவற்றில் காண்க.

"எழுத்துச் சொற்பொரு ளணியாப் பிவையின்
விழுத்தக வொருவன் விளம்பிய வுள்ளுறை
யப்பொழு துரைப்ப தாசு கவியே." (இல-விள-பாட். ச)

(உ)

### மதுரகவி

எடுத்த பொருளினோ டோசை யினிதாய்
அடுத்தவைசெஞ் சொல்லா யணியுந்—தொடுத்த
தொடையும் விளங்க வவைதுதிப்பச் சொல்லின்
இடமுடைய மாமதுர யாப்பு.

(எ - ன்): மதுரகவி யிதுவெனல் நுதலிற்று.

(இ - ள்.) ஓசையும், பொருளு மினிதாய், முழுதுஞ் செஞ்சொல்லாய், அலங்காரமுந் தொடையுந் தெற்றென்று கேட்டார் துதிக்கும்படி பாடுவது மதுரகவியாம்.

---

* உள்ளுறை எனவும் பாடம்.

இக் கவிபாடுவோனும் மதுரகவியாம். சிறுபான்மையிற் றிசைச்சொல்லும், திரிசொல்லும், வடசொல்லும் மருவி வரினு மிழுக்காது.

வரலாறு :

பூமகளும் நல்வாழ்வு பெற்றுள் புரைதீர்ந்த
நாமகளும் பல்கலையும் நண்ணினள்—தோமகல்சீர்
வையம் புகழ்களந்தை வச்சணந்தி மாமுனிவன்
செய்ய பதகமலஞ் சேர்ந்து.

(வி - ம்.) மதுரகவி : சுவையான சொற்களாலும், பொருள்களாலும் யாப்பிலக்கணத்துக் கிசையத் தொடையும் தொடைவிகற்பமும் இணக்கமாய்ப் பொருந்தப் பலவகை அணிகளமைத்துக் கேட்போருக்கு அமுதம் போலிருக்கப் பாடுவது.

உதாரணம், புகழேந்தி, ஔவை முதலியோர் தனிப்பாட்டிலும், தொடர்நிலைச் செய்யுளிலும், கம்பர் இராமாயணத்திலும் காண்க.

"சொல்லும் பொருளும் சுவைபட நிறீஇச்
செல்வுழித் தொடையும் விகற்பமும் செறீஇ
உள்ளத் துள்ளே கொள்ளு மமுதெனத்
தன்மை யுவமை பின்வரும் பெற்றியின்
உருவக முதலுற் றேடைச பொலியப்
பாடுதல் மதுர கவியெனப் படுமே." (இல-விள-பாட். ௫) (௩)

## சித்திரகவி

யாப்புடைய மாலைமாற் றுதியா வேனையவும்
வாய்ப்புடைய சொல்லின் வகுத்தமைத்து—நீப்பிலா
வண்ணமுந் தொன் னூன் மரபு வழுவாமற்
பன்னுவது சித்திரத்தின் பா.

, (எ - ன்): சித்திரகவி யித்தன்மைத்தெனல் நுதலிற்று.

(இ - ள்.) மாலைமாற்று, சக்கரம், சுழிகுளம், ஏகபாதம், எழுகூற்றிருக்கை, காதைகரப்பு, கரந்துறைப்பாட்டு, தூசங்கொளல், வாவனூற்றி, கூட சதுக்கம், கோமூத்திரி, ஓரெழுத்துப்பா, வல்லினப்பாட்டு, மெல்லினப்பாட்டு, இடையினப்பாட்டு, சித்திரக்கா, விசித்திரக்கா, வித்தாரக்கா, விகற்ப நடை, வினுவுத்தரம், சருப்பதோபத்திரம், எழுத்துவருத்தனை, நாகபந்தம், முரசபந்தம்,

கிரோட்டகம், சித்து, ஒரு பொருட்பாட்டு, பல பொருட் பாட்டு, மாத்திரைப் பெருக்கம், மாத்திரைச் சுருக்கம், எழுத்துப் பெருக்கம், எழுத்துச் சுருக்கம், இன்னவை பிறவுமாகிய பல விகற்பத்தாற் செய்யப்பட்டு ஓசை கெடாமல், எழுத்துக் குற்றம், சொற் குற்றம், பொருட் குற்றம், யாப்புக் குற்றம், அலங்காரக் குற்றம் என்னுங் குற்றங்கள் படாமல், பாடப்படுங் கவி சித்திரகவியாம் எ - று.

இக்கவி பாடுவோனுஞ் சித்திரகவியாம். இவையெல்லாம் யாப்பணி யதிகாரங்களிற் கண்டு கொள்க.

(வி-ம்.) சித்திரகவி, மிறைக்கவி என்பன ஒருபொருட் கிளவி.

"கோமூத் திரியே கூட சதுக்கம்
மாலை மாற்றே மாத்திரைச் சுருக்கம்
மாத்திரை வருத்தன மெழுத்து வருத்தனம்
ஒற்றுப் பெயர்த்தல் வினவுத் தரமே
நாக பந்த முரச பந்தம்
திரிபாகி திரிபங்கி பிறிதுபடு பாட்டுக்
காதை கரப்பே கரந்துறைச் செய்யுள்
சக்கரஞ் சுழிகுளம் சருப்பதோ பத்திரம்
அக்கரச் சுதகம் கிரோட்ட மென்ன
முறைபெற வகுத்த மிறைக்கவி யிருபதும்
அறிவுறக் கிளந்த வவற்றின் பால" (இல-விள-அணி. எக)

(ச)

## வித்தாரகவி

பாங்கார் தொடர்நிலைப்பாப் பல்பாதஞ் சேர்தனிப்பா
ஈங்ககலப் பாக்க ளிரண்டாகும்—ஆங்குத்
தொடர்நிலைப்பா வின்விகற்பஞ் சூழ்வளையாய் சொல்லிற்
கடையிலவே யென்றுரைத்தார் கண்டு.

(எ - ன்): அகலக்கவி புகலுதல் நுதலிற்று.

(இ - ள்.) பல செய்யுட்கள் கூடிவந்த தொடர்நிலைச் செய்யுளும், அடிபலவாய் நடக்குந் தனிப்பாச் செய்யுளு மென்னும் இரு திறமும் அகலக்கவியாம். அவற்றுட் டொடர்நிலைச் செய்யுளை விகற்பிக்குமிடத்து ஏற்ற பொருளெடுத்துப் பாடுவோர் அள வல்லது இன்ன அளவென்று உரைப்ப தரிது.

அகலக்கவி பாடுவோனும் அகலக்கவியாம்.

(வி - ம்.) வித்தாரகவி, அகலக்கவி என்பன ஒரு பொருட் கிளவி. சூழ்வளையாய் : மகடூஉ முன்னிலை.

அகலக்கவி : தனிப்பாட்டா யிருப்பது மன்றி அநேகம் பாட்டுக்கள் தொடர்ந்து ஒரு நூலாயு மிருக்கும். இது தனிநிலைச் செய்யுள், தொடர்நிலைச் செய்யுள் என இருவகைப்படும். இவற்றுள் தொடர்நிலைச் செய்யுள்கள் வரையறை யின்றி வரும்.

(உ - ம்.) நல்வழி, நன்னெறி, மூதுரை முதலியனவாம்.

"வித்தார கவியை விளம்புங் காலை
யத்திறந் தொடர்நிலை யடிபல நடக்கும்
தனிப்பா வென்னத் தானிரண் டாகும்" (இல-விள-பாட். எ)

"அவற்றுள்,
தொடர்நிலை விகற்பங் கடையில வென்ப"
(இல - விள - பாட். அ) (கூ)

## பிள்ளைக்கவி

கண்டுரைக்கிற் பிள்ளைக் கவிதெய்வங் காக்கவெனக்
கொண்டுரைக்குந் தேவர் கொலையகற்றி—ஒண்டொடியாய்
சுற்றத் தளவா வகுப்பொடு தொல்விருத்தம்
முற்றுவித்தல் நூலின் முறை.

(எ-ன்): பல்விகற்பங்களிற் சிலவெடுத்துரைப்பான்வேண்டி, அவற்றுட் பிள்ளைக்கவிக்கு இலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பிள்ளைக்கவி பாடுமிடத்து வேண்டுங் கடவுளைச் சுட்டிப் பாட்டுடைத் தலைவனை அவன் சுற்றத் தொகையோடு தேவர் கொலையகற்றிக் காக்க வென, வகுப்பாலும், ஆசிரிய விருத்தத்தாலும் பாடுக எ - று.

'கண்டுரைக்கின்' என்று மிகுத்துச் சொல்லிய வதனால், காப்புக் கவிகளை மூன்று ஐந்து எழு ஒன்பது பதினொன்றாகத் தொடுத்துக் காப்புமாலை யென்று பாடுகையும் உளதென் றுணர்க.

(வி - ம்.) ஒண்டொடியாய் : மகடூஉ முன்னிலை. (கூ)

முறைதருமூன் றுதிமூ வேழிரூந் திங்கள்
அறைகிலம் பத்துமாண் டைந்தேழ்—இறைவனையார்க்

கந்தஞ் சிறுபறையே யாதியா மூன்றொழித்துத்
தந்நிலை மோரேழுஞ் சாற்று.

(எ - ன்): இதுவுமது.

(இ - ள்.) பிள்ளைப் பிரபந்தம் மூன்று மாத முதல் இருபத்தோராம் மாதம் வரை ஒற்றித்த மாதமாகிய பத்துமாதங்களினுங் கேட்பிக்கப்படும். அன்றியும், ஐந்தாமாண்டினும் ஏழாமாண்டினும் இக் கவி கேட்பிக்கினு மிழுக்காது. பெண்பிள்ளைக் கவி பாடுமிடத்துச் சிறுபறை கொட்டலும், சிற்றில் சிதைத்தலும், சிறுதேருருட்டலுமாகிய மூன்று நிலமு மொழித்து, ஒழிந்த ஏழு நிலமும் பாடப்படும் எ - று.

இவ்வேழுடன், கழங்கு, அம்மனை, ஊசல் என்னுமூன்றையுங் கூட்டிப் பத்தாகப் பாடுவாருமுளர். (எ)

சாற்றரிய காப்புத்தால் செங்கீரை சப்பாணி
மாற்றரிய முத்தமே வாரானை—போற்றரிய
அம்புலியே யாய்ந்த சிறுபறையே சிற்றிலே
பம்புசிறு தேரோடும் பத்து.

(எ - ன்): பிள்ளைக்கவிக் கேற்ற பத்து நிலமு முரைத்தல் நுதலிற்று.

(இ - ள்.) காப்பும், தாலும், செங்கீரையும், சப்பாணியும், முத்தமும், வாரானையும், அம்புலியும், சிறுபறை முழக்கலும், சிற்றில் சிதைத்தலும், சிறு தேருருட்டலும் என முறையானே பாடுக எ - று.

நிலங்கள் பத்தும், தம்மி லொக்கக்கொண்டு பாடுமிடத்து ஒற்றிக்கப் பாடுவது சிறப்புடைத்து. இரட்டித்துப் பாடினும் ஓசை பெயர்த்துப் பாடுக எ - று.

(வி - ம்.) இவ்வாசிரியர் 'காப்புச் செங்கீரை தால்' என்றோது முறை பிறழக் கூறினது, செய்யுளாதலான்.

பிள்ளைக்கவி அல்லது பிள்ளைத்தமிழ் :—ஒரு தலைவனது சிறு குழந்தைப் பருவத்தைப்பற்றிக் காப்புமுதல் சிறுதேரீறாகிய பத்துப் பருவங்களும் முறையே பொருந்தும்படி ஒவ்வொன்றிற்கும் பத்துச் செய்யுள் வீதம் ஆசிரிய விருத்தத்தாலாயினும் வகுப்பி

லாயினும் சிறப்பித்துப் பாடுவது. இஃது ஆண்பாற் பிள்ளைக்கவி யெனப்படும்.

“ கடுங்கொலை நீக்கிக் கடவுட் காப்புச்
செங்கீரை தால்சப் பாணி முத்தம்
வாரானை முதல வகுத்திடு மம்புலி
சிறுபறை சிற்றில் சிறுதே ரென்னப்
பெறுமுறை யாண்பாற் பிள்ளைப் பாட்டே.”

(இல - விள - பாட். ௪௬)

இங்ஙனம் ஒரு தலைவியைக் குறித்தும் இப்பிள்ளைக்கவி பாடப்படும். அப்போது ஆண்பாற்பிள்ளைக்கவிக்குரிய பருவம் பத்தினுள் ஈற்றிலமைந்த சிறுபறை முழக்கல் முதலிய மூன்றனையும் நீக்கி அவற்றிற்குப் பதில் கழங்கு, அம்மானை, ஊசல் என்பவற்றைக் கூட்ட வேண்டும். இது பெண்பாற் பிள்ளைக்கவி யெனப்படும்.

“ அவற்றுட்,
பின்னைய மூன்றும் பேதையர்க் காகா
ஆடுங் கழங்கம் மானை யூசல்
பாடுங் கவியாற் பகுத்து வகுப்புடன்
அகவல் விருத்தத் தாற்கிளை யளவாம்.”

(இல - விள - பாட். ௪௭) (அ)

## பல்சந்தமாலை, அந்தாதி

பத்தாதி நூறந்தம் பல்சந்த மாலையாம்
ஒத்தாய வெண்பா வொருநூறு—ஒத்தசீர்
அந்தாதி யாகுங் கலித்துறையு மவ்வகையே
வந்தா லதன்பே ரவை.

(எ - ன்): பல்சந்த மாலைகளும், அந்தாதியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பத்து முதலாக நூறீறாக நின்ற விகற்பத்தது பல் சந்த மாலை விகற்பமாம். நேரிசை வெண்பா நூறு அந்தாதியாய் வந்தால் வெண்பா வந்தாதி யென்றும், கட்டளைக்கலித்துறை நூறு அந்தாதியாய் வந்தாற் கலித்துறை யந்தாதி யென்றும் பெயர் பெறும் எ - று.

பல்சந்தமாலை வகுப்பும் ஆசிரியமுமாய் அந்தாதித்து வரும்.

(வி - ம்.) பல்சந்தமாலை, அந்தாதி:— ஒவ்வொரு சந்தத்துக்கும் பத்துப் பத்துச் செய்யுளாக நூறு வரப் பாடுவது.

“ பத்து முதலாகப் பப்பத் தீறு
வைத்த வண்ண வகைபத் தாகப்
பல்சந்த மாலை பகரப் படுமே.” (இல - விள - பாட். எசு)

“ வெண்பாக் கலித்துறை வேண்டிய பொருளிற்
பண்பா யுரைப்பதந் தாதித் தொகையே.”
(பன் - பாட். ௩௨அ) (௬)

## ✓கலம்பகம்

வைக்கும் புயந்தவம்வண் டம்மனை பாண்மதங்கு
கைக்கிளைசித் தூசல் களிமடக்கூர்—மிக்கமறம்
காலந் தழையிரங்கல் சம்பிரதங் கார்தூது
கோலுங் கலம்பகத்தின் கூறு.

(எ - ன்): கலம்பக இலக்கணங் கூறுதல் நுதலிற்று.

(இ - ள்.) புயம், தவம், வண்டு, அம்மனை, பாண், மதங்கு, கைக்கிளை, சித்து, ஊசல், களி, மடக்கு, குடி, மறம், காலம், தழை, இரங்கல், சம்பிரதம், மேகவிடுதூது என்னும் இப்பதினெட்டும் கலம்பகத்தினுறுப்புப் பொருளாம் எ - று.

‘மிக்க மறம்’ என்று சிறப்பித்த வதனால், இப்பதினெட்டும் கலம்பகத்துக்கு நிலைபெற்ற வுறுப்பு, ஒழிந்தன இன்ன வகையான பொருளாய் வருபவென்னும் நிலைபேறுடைய அல்லவென்று கொள்க.

ஊர் என்றது குடிமை. இரங்கல் என்றது காமமிக்க கழிபடர் கிளவி.

(வி - ம்.) இப்பதினெட்டுறுப்பே யன்றிப் பிச்சியார், கொற்றியார், இடைச்சியார், வலைச்சியார், கீரையார் முதலாயின வருதலும் “கடிசொ லில்லைக் காலத்துப் படினே” என்பதனுற்கொள்க. (௧0)

கூறு மொருபோகு வெண்பாக் கலித்துறைகள்
மாறின் முதலுறுப்பா மன்விருத்தம்—வேறகவல் [பா
வஞ்சித் துறைவிருத்தம் வான்றுறைவெண் பாமருட்
எஞ்சாக் கலியினங்கொண் டீட்டு.

(எ - ன்): கலம்பகப்பா வேறுபாடுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முதல் ஒருபோகு வந்து அதன்பின் ஒரு வெண்பா வந்து, அதன்பின் ஒருகலித்துறை வந்தால், அவை முதலுறுப்பாம். அதன்பின், ஆசிரியவிருத்தம், ஆசிரியப்பா, வஞ்சித்துறை, வஞ்சி விருத்தம், வெண்டுறை, வெண்பா, மருட்பா, கலித்தாழிசை, கலித்துறை, கலிவிருத்தம் என்று சொல்லப்படும் பாக்களியைந்தபடி கொண்டியற்றுக. பிற பாக்கள் வரினு மிழுக்காது எ - று. (கக)

ஈசர்க்கு நூறிழிபைந் தையர்க் கிகலரசர்க்
காசற்ற தொண்ணூ றமைச்சருக்காம்—ஏசா
எழுபானைம் பான்வணிகர்க் கேனையோர்க் காறைந்
திழிபிற் கலம்பகப்பாட் டீண்டு.

(எ - ன்): கலம்பகத்திற் கேற்ற சுருக்கம் இயம்புதல் நுதலிற்று.

(இ-ள்.) தேவர்க்கு நூறும், முனிவர்க்குத்தொண்ணூற்றைந்தும், அரசர்க்குத்தொண்ணூறும், அமைச்சருக்கு எழுபதும், வணிகர்க்கு ஐம்பதும், ஏனையோர்க்கு முப்பதுமாகப் பாடுவதே யிழிபு எ - று.

'ஆசற்ற' வென்று சிறப்பித்த வதனால், குறுநில மன்னரை அரசரைப் போலவும், முனிவரைப் புத்தேளிரைப் போலவும் பாடினும் இழுக்காது.

கலம்பகமும் அந்தாதியாகவே பாடவேண்டுமென்று அறிக.

(வி - ம்.) கலம்பகம் :— ஒரு போகு அல்லது மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா, வெண்பா, கலித்துறையாகிய மூன்றும் முன்னும், புயவகுப்பு முதல் ஊசலீறாகிய பதினெண் பொருட்கூறுபாடுகளும் பின்னுமாக, மடக்கு, மருட்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரிய விருத்தம், கலிவிருத்தம், கலித்தாழிசை, வஞ்சி விருத்தம், வஞ்சித்துறை, வெண்டுறையாகிய பாவும் பாவினமும் மமைய இடையிடை வெண்பாக் கலித்துறை விரவ அந்தாதித் தொடையாற் பாடுவது.

" ஒருபோகு வெண்பாக் கலித்துறை புறமுன்
வருபுய மதங்கம் மானே காலம்
சம்பிர தங்கார் தவங்குற மறம்பாண்
களிசித் திரங்கல் கைக்கிளை தூது
வண்டு தழைமேற் கொண்டெழு மூசல்

மடக்கு மருட்பா வஞ்சி விருத்தம்
அகவல் கலியின மகவல் விருத்தம்
வஞ்சிவஞ் சித்துறை வெண்டுறை மருவி
இடையிடை வெண்பாக் கலித்துறை நடைபெற்
றந்தாதி மண்டலித் தாங்கலம் பகமே.'' (இல-விள-பாட். ௫௨)

''அதுவே,
இமையவர்க் கொருநூ றிழிபைந் தையர்க்
கமைதரு மரசர்க் காகுந் தொண்ணூ
றமைச்சருக் கெழுபான் வணிகருக் கைம்பான்
அமைத்தனர் பின்னவர் தமக்கா றைந்தே.''
(இல-விள-பாட். ௫௩)

'அமைதரும்' என்றதனால் அந்தணரைத் தேவர்க் கொப்பாகவுங் குறுநில மன்னரை அரசர்க் கொப்பாகவும் பாடுதலும் கொள்க. (௪௨)

## ஒலியந்தாதி, மும்மணிக்கோவை

ஈண்டிய முப்பதா யீரெண் கலைவண்ணம்
மூண்டதொலி யந்தாதி முப்பதாம்—ஆண்டகவல்
முன்முறையே வெண்பா கலித்துறைய வந்தாதி
மும்மணிக்கோ வைக்கு முதல்.

(எ - ன்): ஒலியந்தாதியும், மும்மணிக்கோவையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஓரடிக்குப் பதினாறு கலைதொடுத்த பல்சந்த வகுப்புக்கள் அந்தாதியாக முப்பது கூடியது ஒலியந்தாதியாம். நேரிசை ஆசிரியப்பாவும், நேரிசை வெண்பாவும், கட்டளைக் கலித்துறையும், முறையே அந்தாதியாக முப்பது கூடியது மும்மணிக்கோவையாம் எ - று.

'ஈண்டிய' வென்று மிகுத்துச் சொல்லியவதனால், ஒலியந்தாதி சிறுபான்மை எட்டுக்கலையால் வரப்பெறுவனவும், மும்மணிக்கோவை சிறுபான்மை நிலைமண்டில ஆசிரியப்பாப் பெற்றுவருவனவும் உளவெனக் கொள்க. ஒலியந்தாதியை ஒலியலந்தாதியென்பாருமுளர்

(வி - ம்.) ''தத்த மினத்தி லொப்புமுறை பிறழாது
நாலடி யீரெண் கலையொரு முப்பது
கோலிய தொலியந் தாதி யாகும்'' (பன்-பாட். ௨௫௫)

"ஈரொலி யாகிய வண்ணான்கு கலையெனச்
சீரியற் புலவர் செப்பினர் கொளலே" (பன்-பாட். உ௬௬)

"வண்ணக மென்ப தொலியெனப் படுமே" (பன்-பாட். உ௬௭)

என்றார் பன்னிரு பாட்டியலாரும்.

ஒலியந்தாதி :—பல சந்தங்கள் கூடிப் பதினாறு கலை வகுப்பாகிய முப்பது பாட்டு, வண்ணமாயும் அந்தாதித் தொடையாயும் வருவது.

"ஈண்டிய வண்ணமீ ரெண்கலை முப்பான்
ஆண்ட தொலியந் தாதி யாகும்." (இல-விள-பாட். ௬௪)

மும்மணிக்கோவை :—அகவல், வெண்பா, கட்டளைக் கலித்துறை ஆகிய மூன்றும் வகைக்கு முப்பதாக அந்தாதித் தொடையிற் கூறுதல்.

"அகவல் வெண்பா அசையெண் கலித்துறை
தொகைமுப் பதுபெறச் சொற்றொடர் நிலையிற்
கூறுதல் மும்மணிக் கோவை யாகும்." (இல-விள-பாட். ௬௫)

(௩௫)

## ஊர்நேரிசை வெண்பா, ஊரின்னிசை வெண்பா

முதல்வனூ ரின்பேரான் மொழிவன வெண்பா
அதனைத்தொண் ணூறெழுபா னைம்பான்—மதர்விழியாய்
இன்னிசைவெண் பாவிற்கு மொக்கு மியற்பெயர்
அன்னவற்றாற் கட்டுரைத்தா ராய்ந்து.

(எ - ன்:) ஊர்நேரிசைவெண்பாவும், ஊரின்னிசை வெண்பாவும், அவற்றின் தொகையு முரைத்தல் நுதலிற்று.

(இ - ள்.) பாட்டுடைத் தலைவன் ஊர்ப்பெயரொடுத்து நேரிசை வெண்பாவாற் சிறப்பித்துத் தொண்ணூறு, எழுபது, ஐம்பது, என்னுந் தொகையாற் பாடுவது ஊர்நேரிசை வெண்பா என்றும், இவ்வாறு இன்னிசை வெண்பாவாற் பாடுவது ஊரின்னிசை வெண்பா என்றும் பெயர் பெறும் எ - று.

(வி - ம்.) மதர்விழியாய் : மகடூஉ முன்னிலை.

ஊர்நேரிசை வெண்பா :—தொண்ணூறு, எழுபது, அல்லது ஐம்பது நேரிசை வெண்பாக்களால் தலைவன் ஊரைச் சிறப்பித்துப் பாடுவது.

ஊர்இன்னிசை வெண்பா :—இங்ஙனமே இன்னிசை வெண்பாக்களால் தலைவன் ஊரைச் சிறப்பித்துப் பாடுவது.

"இன்னிசை போல இறைவன் பெயரூர்
தன்னி னியல்வது தானே ரிசையே" (இல-விள-பாட். எ௦)

"இறைவன் பெயரு ரினையின் னிசையால்
முறையிற் றெண்ணூ றெழுபா னெம்பான்
அறையி னப்பெய ராகு மென்ப" (இல-விள-பாட். ௬௫)

என்றமையால், ஊர் நேரிசை, ஊரின்னிசையே யன்றிப் பெயர் நேரிசை வெண்பாவும், பெயர் இன்னிசை வெண்பாவும் கொள்க. (௧௪)

## கோவை, கைக்கிளை

ஆய்ந்த கலித்துறைதான் நானூ றகப்பொருண்மேல்
வாய்ந்தநற் கோவையா மற்றுரைப்பின்—ஏய்ந்த
ஒருதலைக் காம முரைப்பவையை யைந்தாய்
வருவிருத்தங் கைக்கிளையா மன்.

(எ - ன்): கோவையுங் கைக்கிளையுங் கூறுதல் நுதலிற்று.

(இ - ள்.) கட்டளைக்கலித்துறை நானூறு அகப்பொருள் மேல்வருவன கோவை யென்பதாம். ஒருதலைக் காமப் பொருள் பெற்று விருத்தம் இருபத்தைந்தாய் வருவன கைக்கிளையாம் எ-று.

(வி - ம்.) அகப்பொருட்கோவை அல்லது கோவை :—காம வின்பத்தைப்பற்றி அகப்பொருளிலக்கணம் அமைய நானூறு கட்டளைக்கலித்துறையாற் பாடுவது.

"முதற் பொருள் கருப்பொரு ளுரிப்பொருண் முகந்து
களவு கற்பெனும் வரைவுடைத் தாகி
நலனுறு கலித் துறை நானூ றாக
ஆறிரண் டுறுப்பும் ஊறின்றி விளங்கக்
கூறுவ தகப்பொருட் கோவை யாகும்"
(இல-விள-பாட். ௫௬)

எனக் கூறும் இலக்கணவிளக்க நூலானுமுணர்க.

கைக்கிளை :—ஒருதலைக் காமத்தை இருபத்தைந்து விருத்தத் தாற் கூறுவது என இவ்வாசிரியர் கூறினாரேனும்,

"ஒருதலைக் காமமோ ரைந்து விருத்தங்
கருத வுரைத்தல் கைக்கிளை யாகும்" (இல-விள-பாட். ௬௭)

எனவும்,

"ஐந்து விருத்தத் தாலே யொருதலைக்
காமத் தைக்கூ றுவது கைக்கிளை" (முத்து வீரி-௧௪௮)

எனவும் பிறவாசிரியர் கூறினமையால், இவ்வெண்பாவை, 'உரைப் பவை ஐந்தாய்' எனத் திருத்தி அதற்கேற்பப் பொருள்கொள்ளு தலுமாம். (௧௫)

## மும்மணிமாலை, நான்மணிமாலை

மன்னிய வெண்பா கலித்துறை மன்னர்பா
முன்னியமுப் பான்மும் மணிமாலை—மன்விருத்தம்
நாட்டிய நாற்பது நான்மணி மாலையாம்
ஈட்டியவந் தாதியா யேய்ந்து.

(எ - ன்): மும்மணிமாலையும், நான்மணிமாலையு முணர்த்து தல் நுதலிற்று.

(இ - ள்.) வெண்பாவும், கலித்துறையும், ஆசிரியமும், அந்தாதியாய் முப்பது செய்யுள் வருமாயின் மும்மணிமாலை என்றும், மேற்கூறிய பாக்களுடன் ஆசிரிய விருத்தஞ் சேர்ந்து அந்தாதியாய் நாற்பது செய்யுள் வருமாயின், நான்மணிமாலை என்றும் பெயர் பெறும் எ - று.

(வி - ம்.) மும்மணிமாலை :—வெண்பாவும், கலித்துறையும், அகவலும் அந்தாதித் தொடையாக முப்பது பாட்டு வருவது.

"வெண்பாக் கலித்துறை யகவலந் தாதிப்
பண்பால் முப்பது பகரின் மும்மணி
மாலை யென்று வகுத்தனர் புலவர்" (இல-விள-பாட். ௬0)

நான்மணிமாலை :—வெண்பாவும், கலித்துறையும், அகவலும், விருத்தமும் அந்தாதித்தொடையாய் நாற்பது வருவது.

"வெண்பாக் கலித்துறை விருத்த மகவல்
பின்பேசு மந்தா தியினாற் பதுபெறின்
நான்மணி மாலை யாமென நவில்வர்." (இல-விள-பாட். ௬௧)
(௧௬)

## இருபாவிருபஃது, இரட்டைமணிமாலை, இணைமணிமாலை

ஏய்ந்த விருபா விருபதுவெண் பாவகவல்
ஆய்ந்த விரட்டை மணியிருபான்—ஏய்ந்தசீர்
வெண்பா கலித்துறையா மேவிய நான்கானூ
றெண்பா விணைமணியா மோர்.

(எ - ன்): இருபாவிருபஃதும், இரட்டை மணிமாலையும், இணைமணிமாலையு மியம்புதல் நுதலிற்று.

(இ - ள்.) வெண்பாவும், ஆசிரியப்பாவும், முறையே அந்தாதியாய் வந்து இருபது செய்யுளான் முடிவது இருபாவிருபஃது என்றும்; வெண்பாவும், கலித்துறையும், முறையே அந்தாதியாய் வந்து இருபது செய்யுளான் முடிவது வெண்பாக்கலித்துறை இரட்டை மணிமாலை என்றும்; வெண்பாவும், ஆசிரியப்பாவும் முறையே அந்தாதியாய், நூறு செய்யுளான் முடிவது வெண்பா அகவல் இணைமணிமாலை என்றும்; வெண்பாவும் கலித்துறையும் கூடி முன்போன் முடிவது வெண்பாக் கலித்துறை இணைமணிமாலை என்றும் பெயர் பெறும் எ - று.

(வி - ம்.) இருபாவிருபஃது:— பத்துவெண்பாவும், பத்து அகவலும் அந்தாதித் தொடையால் இருபது இணைந்து வருவது.

"ஒருபது வெண்பா ஒருபஃ தகவல்
இருபது வரினிரு பாவிரு பஃதே." (இல - விள - பாட். கஉ)

இரட்டைமணிமாலை :— (க) அந்தாதித்தொடையில் இருபது பாட்டு வெண்பாவும், கலித்துறையுமாக இயைந்து வருவதும் (உ) வெண்பாப் பத்தும் விருத்தம் பத்துமாக அந்தாதித்தொடையி லியைந்து வருவதுமாகும் வெண்பாவும் கலித்துறையுமாக இயைந்த இரட்டைமணிமாலையை, வெண்பாக் கலித்துறை யிரட்டை மணிமாலை எனவும், வெண்பாவும் விருத்தமுமாக இயைந்த இரட்டை மணிமாலையை, வெண்பா விருத்த இரட்டை மணிமாலை எனவும் கூறுப.

இணைமணிமாலை :—வெண்பாவும், அகவலும், அல்லது வெண்பாவும், கலித்துறையுமாக இணைந்துவர நூறு நூறாக அந்தாதித் தொடையாற் பாடுவது. அது பாட்டின் போக்குப்போல வெண்பா வகவ லிணைமணிமாலை, வெண்பாக்கலித்துறை யிணைமணிமாலை யென வகுத்துக் கூறப்படும்.

" இருபது வெண்பாக் கலித்துறை யியையின்
வருவது இரட்டை மணிமாலை யாகும்."
(இல - விள - பாட். ௫௧)

" வெண்பா விருத்தம் வியப்புற விருபஃது
எண்பட வுரைப்பதும் இரட்டை மணிமாலை."
(இல - விள - பாட். கூக)

" வெண்பா வகவல் வெண்பாக் கலித்துறை
பண்பா னிரைம் பஃதர் தாதி
இயலின் வருப்ப திணைமணி மாலை." (இல-விள-பாட். ௫அ)
(கஎ)

## ஒருபாவொருபஃது, பன்மணிமாலை

ஓர்ந்தகவல் வெண்பா கலித்துறையென் றொன்றினல்
ஆர்ந்தவொரு பாவொருப தம்மானை - கூர்ந்தொருபோ
ஊச லொழித்தாற் கலம்பகப்பா வொண்மாலை [கு
பேசிய பன்மணியாம் பின்பு.

(எ - ன்): ஒருபாவொருபஃதும், பன்மணிமாலையுமுணர்த்து தல் நுதலிற்று.

(இ-ள்.) ஆசிரியப்பாவேனும், வெண்பாவேனும், கலித்துறை யேனும் அந்தாதியாய்ப் பத்துச் செய்யுள் வருவன ஒருபா வொரு பஃதாம். கலம்பக வுறுப்புக்களில் அம்மானையும், ஒரு போகும், ஊசலும் ஒழித்துமற்றையவுறுப்புக்களாற்பாடுவது பன்மணிமாலை என்று பெயர் பெறும் எ - று.

(வி - ம்.) ஒருபாஒருபஃது :—அகவலாவது, வெண்பாவாவது கலித்துறையாவது அந்தாதித் தொடையில் பத்து வருவது.

" அகவல் வெண்பாக் கலித்துறை யதுகொண்
டொருபா ஒருபஃ தெனப் பெயராம்."
(இல - விள - பாட் கூ௬)

பன்மணிமாலை :— மேற் சொல்லிய கலம்பக உறுப்புக்களுள் ஒருபோகு, அம்மானை, ஊசல் ஆகிய இவைஇல்லாது மற்ற எல்லா உறுப்புக்களு மமையப் பாடுவது.

" அவற்றுள்,
ஒருபோ கம்மானை யூச லின்றி
வருவது பன்மணி மாலை யாகும்.'' (இல - விள-பாட். ௩௬)

## தசாங்கம்

புல்லு மலையாறு நாடூர் புனைதார்மா
கொல்லுங் களிறு கொடிமுரசம்—வல்லகோல்
என்றிவை நஞ்செழுத்தோ டேலா வகையுரைப்ப
நின்ற தசாங்கமென நேர்.

(எ - ன்): சின்னப்பூ வுணர்த்துவான் தொடங்கி, அதற்கு நிலமாகிய தசாங்க முணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மலை, ஆறு, நாடு, ஊர், மாலை, பரி, கரி, கொடி, முரசம், செங்கோல் ஆகிய பத்தும் தசாங்கம் என்று சொல்லப் படும். இவை பாடுமிடத்து நஞ்செழுத்துத் தசாங்கத்துக்கு முன்னும் பின்னும் வாராமற் பாடுக எ - று.

(வி - ம்.) '' மலைநதி நாடூர் வனைதா ரிவுளி
கொலைமத களிறு கொடிமுர சாணை
யிவையே தசாங்க மென்மனார் புலவர்.''
(இல - விள - பாட். ௨௨) (௧௧)

## சின்னப்பூ, தசாங்கப்பத்து

நேருந் தசாங்கத்தை நேரிசை வெண்பாவால்
ஈரைம் பதுதொண்ணூ றீண்டெழுபான்-ஓரைம்பான்
தேர்ந்துரைக்கிற் சின்னப்பூ வீரைந்தாற் செப்பினர்
நேர்ந்த தசாங்க நிலை.

(எ-ன்): சின்னப்பூவும், தசாங்கநிலையு முரைத்தல் நுதலிற்று.

(இ - ள்.) தசாங்கம் பத்தையும் பொருளாகக் கொண்டு, நேரிசை வெண்பா நூறானும், தொண்ணூறானும், எழுபதானும், ஐம்பதானும் பாடுவது சின்னப் பூவாம். முப்பது பாடினும் இழுக்காது. நிலைமைகள் தம்மிலொப்பக்கொண்டு பாடப்படுந் தசாங்கம் பத்தினையும் பத்து வெண்பாவாற் பாடுவது தசாங்கப்பத்து என்று பெயர் பெறும் எ - று.

(வி - ம்.) சின்னப் பூ :— நேரிசை வெண்பாவால் அரசர்க்குரிய தசாங்கத்தைப் பற்றி 100, 90, 70, 50, அல்லது 30 பாட்டுக்கள் பாடுவது.

"மிக்க நேரிசை வெண்பா வதனால்
தக்க தசாங்கந் தன்னை நூறு
தொண்ணூ றெழுப தைம்பது முப்பஃ
தெண்ணப் பாடிற் சின்னப் பூவே."

(இல - விள - பாட். ௮௧)

தசாங்கப் பத்து :— அரசனுக்குரிய மலை, நதி, நாடு, ஊர், மாலை, யானை, குதிரை, கொடி, முரசு, ஆக்கினை ஆகிய தசாங்கத்தை (பத்து அங்கத்தை)ப் பத்து நேரிசை வெண்பாவாற் பாடுதல்.

இஃது ஆசிரிய விருத்தம் பத்தா லமைந்து தசாங்கத்தயல் எனப் பெயர் பெறுதலுமுண்டு.

"நேரிசை வெண்பா வானிரு பன்பெறு
தசாங்கத் தினைச்சொலல் தசாங்கப் பத்தாம்."

(இல - விள - பாட். ௮௦)

"அரசன் தசாங்க மாசிரிய விருத்தம்
ஐயிரண் டுறைவது தசாங்கத் தயலே." (முத் - வீரி. ௧௪௧)

(௨௦)



## விருத்தவகை

நிலையார் குடைசெங்கோ லூர்நாடு நீள்வேல்
கொலையார் களிறு குதிரை—சிலைவாள்
இவற்றின்மேன் மன்விருத்த மீரைந்தாய் வந்தால்
அவற்றின்பேர் நாட்ட லறிவு.

(எ - ன்): விருத்த விகற்ப முரைத்தல் நுதலிற்று.

(இ - ள்.) குடை, செங்கோல், ஊர், நாடு, வேல், கரி, பரி, வில், வாள் இவ் வொன்பதனையும் பொருளாககொண்டு, ஒன்றன் மேற் பத்தாசிரியவிருத்தம் புணர்த்தால், அப் பொருளோடு பெயர் கொடுத்து, குடைவிருத்தம், செங்கோல்விருத்தம், ஊர் விருத்தம் நாட்டு விருத்தம், வேல் விருத்தம், யானை விருத்தம், குதிரை விருத்தம், வாள் விருத்தம் என்று வழங்கப்படும் எ - று.

(வி - ம்.) "பரிசிலே யானே வாள்குடை வேல்செங்
கோலொடு நாடு ரூறுப்பி னகவல்
விருத்தம் பத்தென வேண்டினர் புலவர்"
(பன் - பாட். உஅஅ)

என்றார் பன்னிருபாட்டியலாரும்.

பரி முதலியவற்றைப் பத்துப் பத்தாகக் கூறும் ஒன்பது வகை விருத்தமும் அவ்வப் பெயரான் விளங்கு மென்றுணர்க. (உக)

## ஊர்வெண்பா, அலங்கார பஞ்சகம்

அறிந்திடி லூர்வெண்பா வையிரண்டாம் வெள்ளே
செறிந்த கலித்துறைசிர் மன்பா—அறைந்த
கலங்காத மன்விருத்தங் காண்டகைய வண்ணம்
அலங்கார பஞ்சகமென் றூர்.

(எ - ன்): ஊர் வெண்பாவும், அலங்கார பஞ்சகமும் உரைத்தல் நுதலிற்று.

(இ - ள்.) ஊரடுத்து நேரிசை வெண்பா பத்து வந்தால் ஊர் வெண்பா எனவும்; நேரிசை வெண்பாவும், கலித்துறையும், ஆசிரியப்பாவும், ஆசிரிய விருத்தமும், வகுப்புமாகிய ஐந்தும் முறையே வந்தால் அலங்கார பஞ்சகம் எனவும் பெயர் பெறும் எ - று.

(வி - ம்.) வெள்ளே - வெண்பா, மன்பா-ஆசிரியப்பா, வண்ணம்-வகுப்பு (சந்த விருத்தம்).

ஊர் வெண்பா :—ஓர் ஊரைக்குறித்துப் பத்து நேரிசை வெண்பாவால் சிறப்பித்துப் பாடுவது.

"வெண்பா வாற்சிறப் பித்து ரொருபான்
பாவிரித் துரைப்பதூர் வெண்பா வாகும்"
(முத்-வீரி. கஙடு)

அலங்கார பஞ்சகம்:—வெண்பா, கலித்துறை, அகவல், விருத்தம், சந்த விருத்தம் ஆகிய இவைகள் மாறி மாறி வர நூறு செய்யுள் அந்தாதித் தொடையாகப் பாடுவது.

"வெள்ளே கலித்துறை யகவல் விருத்தம்
எள்ளலில் வண்ண மிவையோ ரைந்தும்
அலங்கார பஞ்சக மாகு மென்ப"
(இல - விள - பாட். அச) (உஉ)

### ஊசல், நாழிகை வெண்பா

ஆங்கவிருத் தத்தா லறைந்தகலித் தாழிசையால்
ஓங்கியசுற் றத்தளவா யூசலாம்—போங்கடிகை
தேவர்க்குங் காவலர்க்குந் தேர்ந்துரைக்க வெண்பாவை
மேவியநா லெட்டாக வேய்ந்து.

(எ - ன்): ஊசலும், நாழிகை வெண்பாவும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஆசிரிய விருத்தத்தாலாதல், கலித்தாழிசையாலாதல், சுற்றத் தளவாத் தொகையாகப் பாடுவது ஊசல் என்பதாம். நாழிகை யளவைக் குறித்துத் தேவருக்கும், அரசருக்கும் நேரிசை வெண்பாவால் முப்பத்திரண்டாகப் பாடுவது நாழிகை வெண்பா எனப்படும் எ - று.

ஊசல் முதற்கவியில் வண்ணமும் கொள்க. வண்ணம் என்பது வகுப்பு.

(வி - ம்.) ஆங்க விருத்தம்-என்புழி, ஆங்க அசைநிலை; விருத்தம் - ஆசிரிய விருத்தம்.

ஊசல் :—சுற்றத்தா ரோடுங்கூடி வாழ்வதாக என்று கலித்தாழிசையினாலாவது, ஆசிரிய விருத்தத்தினாலாவது பாடுவது.

"அகவல் விருத்தங் கலித்தா ழிசையாற்
பொலிதரு கிளையொடும் புகலுவ தூசல்"
(இல - விள - பாட். அ௫)

நாழிகை வெண்பா :—தேவரிடத்தும், அரசரிடத்தும் நிகழும் காரியங்கள் கடிகை யளவிற் றோன்றி நடப்பதாக முப்பத்திரண்டு நேரிசை வெண்பாவாற் பாடுதல்.

"தேவ ரரசர் திறனே ரிசையான்
மேவுங் கடிகையின் மேற்சென் றதனை
நாலெட் டுறச்சொலல் நாழிகை வெண்பா"
(இல - விள - பாட். கo) (உ௬)

### அட்டமங்கலம், நவமணிமாலை, தசப்பிராதுற்பவம்

வேய்ந்த விருத்தங்க ளெட்டட்ட மங்கலமாம்
வாய்ந்தன வொன்பான் மணிமாலை—ஆய்ந்தங்

கிசைத்திடுவர் மால்பிறப்பா லிரைந்து வாழ்த்துத்
தசப்பிரா துற்பவமாந் தந்து.

(எ - ன்): அட்டமங்கலமும், நவமணிமாலையும், தசப்பிராதுற்பவமும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஆசிரிய விருத்தத்தாற் கவிதோறும் தேவர்கள் காக்கவென எட்டுக் கவியாகப் பாடுவது அட்ட மங்கலமாம். மேற் கூறியவாறே ஒன்பது கவியாகப் பாடுவது நவமணி மாலையாம். மால் பிறவிப் பேதப் பதின்மருங் காக்கவெனத் தனித்தனி ஆசிரிய விருத்தத்தாற் பத்துக் கவி பாடுவது தசப்பிரா துற்பவமாம் எ-று.

வாழ்த் தென்பதனை யெங்கு மொட்டிக் கொள்க.

(வி - ம்.) இஃது உற்பவமாலை எனவும் பெயர் பெறும்.

அட்ட மங்கலம் :—அந்தாதித் தொடையாலாய ஆசிரிய விருத்தம் எட்டால் கடவுளைத் துதித்து அவர் காக்கக் கடவரெனப் பாடுவது.

"கடவுள் காக்க வெனக்கவி யிருநான்
கடைவுற வகவல் விருத்த மதனால்
வகுப்ப தட்ட மங்கல மாகும்" (இல - விள - பாட். அரு)

நவமணி மாலை :—வெண்பா முதலாக வெவ்வேறு பாவாலும், பாவினத்தாலும் ஒன்பது பாட்டு அந்தாதியாய்ப் பாடுவது.

"வெண்பா முதலா வேறே ரொன்பது
நண்பாக் கூறல் நவமணி மாலை" (இல - விள - பாட். எஎ)

தசப்பிராதுற்பவம் :—மாயன் பிறப்புப் பத்தினையும் அந்தாதித் தொடையாலாய ஆசிரிய விருத்தம் பத்தால் ஒவ்வொரு அவதாரத்தையும் துதித்து அவ்வவதாரம் பாட்டுடைத் தலைவனைக் காக்கக் கடவதெனப் பாடல்.

"அரிபிறப் பொருபது மகவல் விருத்தத்
துரிதிற் புகற லுற்பவ மாலை" (இல - விள - பாட். கoஅ)

"சேலே யாமை யேனஞ் சிங்கங்
கோலே வாமனன் மூவகை யிராமர்
கரியவன் கற்கி யெனவரு கடவுளர்
புரிதரு தோற்றந் தெரிதரப் பராஅய்ப்

பாட்டுடைத் தலைவனைக் காக்க வேண்டி
யினமொழி காட்டி யகவல் விருத்தம்
ஒருப' டியற்றுத லாழியோன் பிறப்பே" (பன்-பாட். கஅஅ)

என்றார் பன்னிருபாட்டியலாரும். (உச)

## நயனப்பத்து, பயோதரப்பத்து

தந்துரைத்த மன்விருத்தஞ் சார்ந்த கலித்துறைதான்
அந்தமுறுங் கண்முலையே லையிரண்டாய்—வந்தால்
நயன பயோதரப்பத் தாமென்று நன்னூற்
பயனுணர்ந்தார் முன்பு பகர்.

(எ - ன்): நயனப்பத்தும் பயோதரப்பத்தும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஆசிரிய விருத்தத்தானுல், கலித்துறையினுனுதல் நயனத்தையும், பயோதாத்தையும் பொருளாகக்கொண்டு தனித்தனி பப்பத்துக் கவி பாடுவது நயனப் பத்து என்றும், பயோதரப் பத்து என்றும் பெயர் பெறும். எ - று.

(வி - ம்.) மன் விருத்தம் - ஆசிரிய விருத்தம். கலித்துறை- கட்டளைக் கலித்துறை.

நயனப் பத்து:—தலைவியின் கண்ணைப்பற்றி ஆசிரிய விருத்தத்தாலாயினும் கட்டளைக் கலித்துறையினு லாயினும் தனித்தனி பத்துக் கவி பாடுவது.

பயோதரப் பத்து :—தலைவியின் தனத்தைப்பற்றி மேற்கூறிய வாறே தனித்தனி பத்துக் கவி பாடுவது.

"பணைமுலை நயனத் தினைப்பப் பத்தா
அணைவுறப் புகற லப்பத் தாகும்"
(இல-விள-பாட். கஉ) (உரு)

## பெண்கள் பருவம்

பகருங்கா லைந்தேழ் பதினொன்று பன்மூன்
றகலாத பத்தொன்பா னையைந்—திகலாத
முப்பத்தொன் றீரிருபான் பேதைமுத லோர்க்குச்
செப்புவரான் டெல்லைத் திறம்.

(எ-ன்): உலாவுணர்த்துவான் தொடங்கிப் பேதை முதலாகப் புறத்திலக்கணமாகிய எழுநிலனும் இவையெனல் நுதலிற்று.

(இ - ள்.) ஐந்து முதல் ஏழளவும் பேதை. எட்டு முதல் பதினொன்றளவும் பெதும்பை. பன்னிரண்டு முதல் பதின்மூன்றளவும் மங்கை. பதினான்கு முதல் பத்தொன்பதளவும் மடந்தை. இருபது முதல் இருபத்தைந்தளவும் அரிவை. இருபத்தாறு முதல் முப்பத்தொன்றளவும் தெரிவை. முப்பத்திரண்டு முதல் நாற்பதளவும் பேரிளம் பெண் எ - று.

பருவம் ஒன்றுக்கு வருடம் ௩, ௪, ௨, ௬, ௬, ௬. ௯.

(வி - ம்.) பெண்களின் ஏழு பருவங்களாவன :—

௫ முதல் ௭, ஆண்டு பேதை. ௮ முதல் ௧௧, ஆண்டு பெதும்பை. ௧௨ முதல் ௧௩, ஆண்டு மங்கை. ௧௪ முதல் ௧௯, ஆண்டு மடந்தை. ௨0 முதல் ௨௫, ஆண்டு அரிவை. ௨௬ முதல் ௩௧, ஆண்டு தெரிவை. ௩௨ முதல் ௪0, ஆண்டு பேரிளம் பெண்.

5 - 7 "ஐந்து முதலே ழாண்டும் பேதை."

(இல - விள - பாட். ௯௯)

8 - 11 "எட்டு முதனொன் காண்டும் பெதும்பை."

(இல - விள - பாட். ௧00)

12 - 13 "ஆறிரண் டொன்றே யாகு மங்கை."

(இல - விள - பாட். ௧0௧)

14 - 19 "பதினான் காதிபத் தொன்பான் காறும்
20 - 25 எதிர்தரு மடந்தைமே லாறு மரிவை."

(இல - விள - பாட். ௧0௨)

26 - 31 "ஆறு தலையிட்ட விருபதின் மேலோர்
32 - 40 ஆறுந் தெரிவையெண் ணைந்துபே ரிளம்பெணென்
றேழும் பருவத் தோர்க்குரைத் தனரே"

(இல - விள - பாட். ௧0௩)

| | | | |
|---|---|---|---|
| (1) பேதை | ... | 5— 7=3 | வருடம். |
| (2) பெதும்பை | ... | 8—11=4 | ,, |
| (3) மங்கை | ... | 12—13=2 | ,, |
| (4) மடந்தை | ... | 14—19=6 | ,, |
| (5) அரிவை | ... | 20—25=6 | ,, |
| (6) தெரிவை | ... | 26—31=6 | ,, |
| (7) பேரிளம்பெண். | ... | 32—40=9 | ,, (௨௬) |

## உலா, குழமகன்

திறந்தெரிந்த பேதை முதலெழுவர் செய்கை
மறந்தயர வந்தான் மறுகென் — றறைந்தகலி
வெண்பா வுலாவாங் குழமகன்மேன் மேவிலவ்
வொண்பாக் குழமகனு முற்று.

(எ-ன்): உலாவும், குழமகனும் ஆமாறுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) பேதை முதலானோர் காதல் கூர வீதியிடைப் போந்தான் பாட்டுடைத் தலைவனென்று கலிவெண்பாவாற் பாடுவது உலாப்புறமாம். மடந்தையர் கையிற்கண்ட குழமகனைப் புகழ்ந்து மேற்கூறிய பாவால் பாடுவது குழமகனும் எ - று.

'திறந்தெரிந்த'வென்றமிகுத்துச் சொல்லியவதனால் உலாப் புறத்துமுன் குழமகனைப் பாமனும் இழுக்காது. அது தலைவன் நாடும், தாரும், பெயருமுள்ளிட்ட வளர்தோன்றப் பாடுவது.

(வி - ம்.) கையிற்கண்ட குழமகனை என்பது கைவசப்பட்ட தலைமகனை; கையிற்கண்ட பாலனை எனினுமாம். தலைவன் நாடும் தாரும் பெயருமுள்ளிட்ட வளர்தோன்றப்படுவது என்றமையால், குழமகன் என்பதற்குத் தலைமகன் எனப் பொருள் கோடலே சிறப்புடைத்து.

குழமகன் - ஓர் பிரபந்தம்.

உலா:—இளமைப் பருவமுடைய தலைவனைக் குலம், குடிப் பிறப்பு, பரம்பரை முதலியவற்றான் இன்னானென்பது தோன்றக் கூறி, அவன் வீதியில் பவனிவர, அவ்விடத்து நெருங்கியுள்ள பேதை முதலாகிய எழு பருவத்துப் பெண்களும் கண்டு காதல் கொண்டதாக நேரிசைக்கலிவெண்பாவாற் பாடுவது.

"குழமகனைக்கலி வெண்பாக் கொண்டு
விழைதொல் குடிமுதல் விளங்க வுரைத்தாங்
கிழைபுனை நல்லா ரிவர்மணி மறுகின்
மற்றவன் பவனி வரவேழ் பருவம்
உற்றமா ணர்தொழப் போந்த துலாவாம்."

(இல - விள - பாட். கஅ)

நல்லார் இவர் மணிமறுகு என்றது பரத்தையர் வீதியை

குழமகன்: கலிவெண்பாவால், மங்கையர் தம் கையிற் கண்ட இளமைத் தன்மையுடைய குழமகனைப் புகழ்ந்து பாடுவது.

"கலிவெண் பாவாற் கையினிற் கண்ட
குழமக னைச்சொலிற் குழமக னாகும்."

(இல - விள - பாட். ககO) (உஎ)

வளமடல்

உற்ற அறம்பொருள்வீ டெள்ளி யுயர்த்தின்பம்
பொற்றொடி காதற் பொருட்டாகப்—பெற்றி
உரைத்தகலி வெண்பா மடலிறைவ னெண்பேர்
நிரைத்த வெதுகை நிறுத்து.

(எ - ன்): வளமடல் கூறுதல் நுதலிற்று.

(இ-ள்.) அறம் பொருள் வீட்டை யெள்ளி இன்பத்தையே வலியுறுத்திப் பாட்டைத் தலைவனியற் பெயருக்குத் தக்க முழுது மொரே யெதுகையாகத் தனிச்சொலின்றிக் கலிவெண்பாவாய் மடலூரும்பெற்றி யிற்றென்று பாடுவது வளமடலாம் எ - று.

வளமடலென்பது உரையிற்கோடல்.

(வி - ம்.) வளமடல்:—அறம் பொருள் வீடு என்னும் மூன்றின் பயனையும் இகழ்ந்து மங்கையரைச் சேர்தலான் உண்டாகிய காம வின்பத்தினையே பயனெனக் கொண்டு தனிச்சொல் இன்றி இன்னிசைக் கலி வெண்பாவால் தலைவன் இயற் பெயர்க்குத் தக்க எதுகை வரப் பாடுதல் வளமடலாம்.

"அறம்பொருள் வீடெனு மம்முக் கூற்றின்
திறங்கடிந் தரிவையர் திறத்துறு மின்பம்
பயனெனக் கலிவெண் பாவாற் றலைவன்
பெயரெது கையினிற் பேசுதல் வளமடல்"

(இல - விள - பாட். கசு)

வளமடல், இன்பமடல் என்பன ஒரு பொருட்கிளவி. (உஅ)

அங்கமாலை, பாதாதிகேசம், கேசாதிபாதம்

நிறுத்த வெளிவிருத்த நீடுறுப்பில் வந்தால்
குறித்தங்க மாலையாக் கொள்க—உறுப்பமைந்த

பாதாதி கேசமுங் கேசாதி பாதமுமா
ஓதுங் கலிவெண்பா வொன்று.

(எ - ன்): அங்கமாலேயும், பாதாதிகேசமும், கேசாதிபாதமும், உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உறுப்புக்களை வெளிவிருத்தத்தால் புகழ்ந்து கோவையாகப் பாடுவது அங்கமாலேயாம். அவ்வங்கங்களைக் கலிவெண்பாவாற் புகழ்ந்து பாதாதிகேசமாகப் பாடுவது பாதாதிகேசம் என்றும், கேசாதிபாதமாகப் பாடுவது கேசாதிபாதம் என்றும் பெயர் பெறும் எ - று.

(வி - ம்.) உறுப்புக்களை - அவயவங்களை.

அங்கமாலே :—ஆண் பெண்களின் அவயவங்களை வெண்பாவாலும், வெளிவிருத்தத்தாலும் பாதாதிகேசம், கேசாதிபாதமுறை தவறாதிருக்கும்படி அந்தாதித் தொடையாகப் பாடுவது.

"மிக்க வுறுப்பை வெண்பா விருத்தந்
தக்கவொரு முறையாற் றொடர்வுறப் பாடுதல்
அங்க மாலே யாமெனப் பகர்வர்." (இல-விள-பாட். எ௰)

பாதாதிகேசம்—காலமுதல் தலையீறாகவும் } கலி வெண்பாவால்
கேசாதிபாதம்—தலைமுதல் காலீறாகவும் }

வர்ணித்துப் பாடுவன.

"அடிமுதன் முடியள வாக வின்சொற்
படர்வுறு கலிவெண் பாவாற் கூறல்
பாதாதி கேசங் கேசாதி பாதம்
ஓதினப் பெயரா லுரைக்கப் படுமே."
(இல - விள - பாட். ககக)

இவை பாதாதிகேச மாலே எனவும் கேசாதிபாத மாலே எனவும் பெயர் பெறும். (உக)

## ஆற்றுப் படை

ஒன்று மகவலா லொண்புலவர் யாழ்ப்பாணர்
குன்றாத சீர்ப்பொருநர் கூத்தரே—என்றிவரை
ஆங்கொருவ னாற்றுப் படுத்த பரிசறைந்தால்
பாங்காய ஆற்றுப் படை.

(எ-ன்): ஆற்றுப்படை யிலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) ஆசிரியப் பாவாற் புலவரையானும், பாணரையானும், பொருநரையானும், கூத்தரையானும், தம்முள் ஒருவன் ஆற்றுப்படுத்தால்: புலவ ராற்றுப்படை, பாணராற்றுப்படை, பொருநராற்றுப்படை, கூத்தராற்றுப்படை யென்று வழங்கப் படும் எ-று.

அவை வெண்கலிப்பாவாற் பாடினும் இழுக்காது.

(வி-ம்.) ஆற்றுப்படை:—கூத்தர் முதலியவர்களுள் ஒருவர் கொடையாளியான ஒருவனிடத்துத் தாம் பெற்றசெல்வத்தை எதிர்வந்த இரப்போர்க்கு உணர்த்தி, அவரும் அந்தக் கொடையாளியினிடம் தாம் பெற்றது போலவே பொருளைப் பெறுமாறு வழிப்படுத்துவது.

"அரசர் பாவா லாற்றுப் படைமேல்
உரைசெய் தவையென் றோர்ந்தனர் கொளலே."

(இல-விள-பாட். ககரு)

அன்றியும்,

"கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்
சென்றுபய னெதிரச் சொன்ன பக்கமும்"

எனவரும் தொல்காப்பியத்தானுமுணர்க. (கூ0)

## தானைமாலை, வஞ்சிமாலை, வாகைமாலை

படைத்திறஞ் சொல்லின் பகர்தானை வஞ்சி
எடுத்துமேற் சேறல் இயம்பின்—அடுத்தமைந்த
வெற்றியுரை வாகையாம் வேந்தன்பா வொன்றினால்
உற்றுரைத்து மாலைப்பே ரோது.

(எ-ன்): தானைமாலையும், வஞ்சிமாலையும் வாகைமாலையும் உரைத்தல் நுதலிற்று.

(இ-ள்.) ஆசிரியப்பாவால் தானையைப் புகழ்ந்துரைப்பின் தானைமாலையாம். படைமேலெடுத்துச் சேறலைப் பாடின் வஞ்சிமாலையாம். வெற்றியைப் பாடின் வாகைமாலையாம் எ-று.

ஆசிரியப் பாவால் வருவ தெல்லாவற்றிற்கு மொக்கும்.

(வி - ம்.) தானைமாலை :—அகவலோசையிற் பிறழாத ஆசிரியப்பாவால் அரசன் முன் எடுத்துச் செல்லும் கொடிப்படையைக் கூறுவது.

வஞ்சிமாலை :—படையெடுத்துச் செல்வதைப் பாடுவது. இதனை, வரலாற்று வஞ்சிமாலை எனவும் கூறுவர்.

வாகைமாலை :—போர்க்களத்தில் நடந்த போரின் வெற்றியைப் பாடுதல்.

இன்னமும் புறத்திணைத் துறைப் பொருளுக்கிசையப் பாடப்படும் மாலைகளெல்லாம் அவ்வத்துறைப் பெயராற் கூறப்படும்.

(உ - ம்.) நொச்சிமாலை, காஞ்சிமாலை, உழிஞைமாலை, தும்பை மாலை முதலாயின.

"ஆசற வுணர்ந்த வரசர் பாவால்
தூசிப் படையைச் சொல்வது தானை
மாலை யாகும் வரலாற்று வஞ்சி
ஞாலமேற் றானை நடப்பது சொல்லின்."

(இல - விள - பாட். கoக) (ருக)

## தாரகைமாலை, மங்கலவள்ளை

ஓதுசந்தத் தாலுரைத்தல் ஒண்தா ரகைமாலை
கோதிலாக் கற்பிற் குலமகளை—நீதிசேர்
மங்கல வள்ளை வகுப்பொடு வெண்பாவால்
இங்காமொன் பானென் றிசை.

(எ - ன்): தாரகைமாலையும், மங்கலவள்ளையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தூசிப் படையைப் புகழ்ந்து வகுப்பால் ஒன்பது கவிபாடுவது தாரகைமாலையாம். கற்புடை மகளிரைப் புகழ்ந்து ஒன்பது வகுப்பும் ஒன்பது வெண்பாவுமாகப் பாடுவது மங்கல வள்ளையாம் எ - று.

அருந்ததிக்கற்பின் மகளிர்க்குள்ள இயற்கைக் குணங்களை வகுப்பாற் பாடுவது தாரகைமாலை யென்பாருமுளர்.

(வி - ம்.) தாரகைமாலை :—தூசிப் படையைப் புகழ்ந்து சந்தத்தால் ஒன்பது கவி பாடுவது. இனி. கற்புடைமகளிரின் இயற்கைக் குணங்களை வகுப்பாற்பாடுவது தாரகைமாலை யென்பது இலக்கண விளக்க நூலார் முதலியோருடைய கொள்கை.

"வகுப்பாற் கற்புடை மகளிர்க் குள்ள
தகைத்திறங் கூறுதல் தாரகை மாலை."

(இல-விள-பாட். கOஎ)

"அருந்ததிக் கற்பின் அரிவையர்க் குள்ள
இயற்கைக் குணங்களை வகுப்பா லியம்புதல்
தாரகை மாலையாஞ் சாற்றுங் காலே." (முத். வீரி. கOரு)

என்பவற்றானுணர்க.

மங்கலவள்ளை :—உயர்குல மங்கையை ஒன்பது வெண்பாவாலும், வகுப்பாலும் வர்ணித்துக்கூறல்.

"ஒன்பது வெண்பா வகுப்பா லுயர்குல
மங்கையைப் பாடுதல் மங்கல வள்ளை."

(இல - விள - பாட். கூஅ) (ருஉ)

## யானைவஞ்சி

இசைந்த நிலங்குலம் ஒத்த வெழிலோ
டசைந்த பிராயத் தளவும்—இசைந்தமதம்
துன்னவஞ்சி வீடுயிர்கோன் மன்னன் தொடர்ந்தணைத்
சொன்னவஞ்சி யானைத் தொழில். [தல்

(எ - ன்): யானைவஞ்சி யியம்புதல் நுதலிற்று.

(இ - ள்.) யானையது பிறப்புங் குலமும் ஒத்த அழகுப் பிராயமும் என்பவற்றின் இலக்கண அளவும் மதந்துன்னினவிடத் தஞ்சிவிடுதலும், கொன்று திரிதலும், அதுகண் டரச னணைத்தலும், வஞ்சிப்பாவாற் சொல்லப்பட்டது யானைவஞ்சியாம் எ - று.

(வி-ம்.) இதனை யானைத்தொழின்மாலை யென்பர் பிறநூலார்.

யானைத் தொழின்மாலை :—யானையிருந்த மலை, காடு, நதிகள், அவயவங்களின் அழகு, வயது, குலநன்மை, உயரம், நீளம், சுற்றளவு ஆகிய இவை இவ்வளவினவா யிருத்தல் வேண்டுமென்னும் இலட்சணம், மும்மதம் கொள்ளுதல், அடுத்தாரைக் கொல்லுதல், அரசனைக் காணின் அறிந்து வணங்குதல் முதலியவற்றை வஞ்சிப் பாவாற் பாடுதல்.

"நிலமொழி லயராம் நேர்ந்த வயது
குலமள விலக்கண மும்மதங் கோடல்
அடுத்திடிற் கோறல்கண் டாசனே யறிதல்
தொடுத்தல் வஞ்சி யானைத் தொழிலாம்."
(இல - விள - பாட். ககஉ) (ருரு)

## மெய்க்கீர்த்தி, கையறமோதாப்பா

தொழிலார்ந்த மெய்க்கீர்த்தி சொற்சி ரடியால்
எழிலரசர் செய்தி யிசைப்பர்—மொழியுங்கால்
கையற மோதார் கலிவஞ்சி யென்றிவற்றல்
பொய்தீர்ந்த நூலோர் புரிந்து.

(எ - ன்): மெய்க்கீர்த்தி நீர்மையுங் கையற மோதாப்பாவும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஆசிரியம் விரவிய சொற்சீரடிகளால் மன்னரது உண்மைக் கீர்த்தியைத் தொடுத்துப் பாடுவது மெய்க்கீர்த்தியாம். கையறம் கலிப்பாவாலும் வஞ்சிப்பாவாலும் பாடப்படா எ - று.

(வி - ம்.) மெய்க்கீர்த்திமாலை:—குல பாரம்பரையிற் கீர்த்தியாக நடப்பித்ததைச் சொற்சீரடியென்னுங் கட்டுரைச் செய்யுளாற் சொல்லுதல்.

"சொற்சீ ரடியாற் றெழிற்படு கீர்த்தியைப்
பொற்புற மொழிதல் மெய்க்கீர்த்தி மாலை."
(இல - விள - பாட். க0ரு)

அம்போதரங்கம், அசைபடி, பிரிந்திசைக்குறள், சொற்சீரடி, எண் என்பன ஒரு பொருட்கிளவியாம்.

கையறம் ஓதாப்பா:—கையறுநிலை வஞ்சிப்பாவாலும், கலிப்பாவாலும் பாடலாகாது.

கையறம், கையறவு, கையறுநிலை யென்பன ஒரு பொருட் கிளவி. (ருச)

## புகழ்ச்சிமாலை, நாமமாலை

புரிந்த மயக்கவடி வஞ்சியால் பொய்தீர்
திருந்திழையார் சீர்பேர் சிறக்கத்-தெரிந்துரைத்தான்

மன்னும் புகழ்ச்சிநன் மாலையா மைந்தர்க்காம்
பின்னுமே மாலைப்பேர் பெற்று.

(எ - ன்): புகழ்ச்சி மாலையும், நாமமாலையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அடிமயங்கிய வஞ்சிப்பாவாற் கோற்றொடி மாதரைக் குணம் பெய ரடுக்கிப் புகழ்ந்து பாடுவது புகழ்ச்சிமாலையாம்; மேற்கூறியவாறே ஆடவரைப் புகழ்ந்து பாடுவது நாமமாலையாம்; எ - று.

(வி - ம்.) புகழ்ச்சிமாலை:—மாதர்களின் சிறப்பை அகவலடியும் கலியடியும் மயங்கிவந்த வஞ்சிப்பாவால் கூறுதல்.

நாமமாலை:—அகவலடியும் கலியடியும் விரவிவந்த வஞ்சிப்பாவால் ஆண்மகனைச் சிறப்பித்துப் பாடுதல்.

"மயக்க வடிபெறு வஞ்சிப் பாவால்
வியத்தகு நல்லார் விழுச்சீ ருரைத்தல்
புகழ்ச்சி மாலை புருடர்க் குரைப்பின்
நாம மாலை யாமென நவில்வர்."

(இல - விள - பாட். கoசு) (நகு)

## வேறு இரட்டைமணிமாலை, வருக்கமாலை

பெற்றசீர் மன்விருத்தம் வெண்பாப் பெயர்ந்திருபான்
மற்றை யிரட்டைமணி மாலையாம்—பொற்றொடியாய்
மன்னகவ லெட்டாய் வருக்கவெழுத் தான்வருமேல்
முன்வருக்க மாலை மொழி.

(எ - ன்): இரட்டைமணி மாலையும் வருக்கமாலையு முணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஆசிரிய விருத்தமும் நேரிசைவெண்பாவுந் தம்முள் மாறி அந்தாதியாய் இருபது வருவது இரட்டைமணி மாலையாம்; உயிர் வருக்கத்தேனும், க ச த ந ப ம வ என்னும் ஏழுயிர்மெய் வருக்கத்தேனும் அவ்வவ் வருக்கமுறையே யெட்டாசிரியம் வந்தால் வருக்கமாலையாம் எ - று.

யகர ஞகாங்களை நீக்கி யேழுயிர்மெய் யென்றது "பிறநூன் முடிந்தது தானுடன் படுதல்" என்னுந் தந்திர உத்தி.

(வி - ம்.) இரட்டைமணிமாலை—வெண்பாப் பத்தும் விருத்தம் பத்துமாக அந்தாதித் தொடையில் இயைந்து வருவது. இனி, அந்தாதித் தொடையில் இருபது பாட்டு வெண்பாவும், கலித்துறையுமாக இயைந்து வருதலுமுண்டு.

"வெண்பா விருத்தம் வியப்புற விருபஃ
தெண்பட வுரைப்பது மிரட்டை மணிமாலை."

(இல - விள - பாட். ௬௧)

"இருபது வெண்பாக் கலித்துறை யியையின்
வருவ திரட்டை மணிமாலை யாகும்." (இல-விள-பாட். ௩௧)

வருக்கமாலை:—மொழிக்கு முதலாகா நின்ற வருக்க வெழுத்துக்கள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு கவியாக அவ் வெழுத்தை முதலாகக் கொண்டு பாடுதல்.

அன்றியும், மொழிக்கு முதலாகாநின்ற பன்னிரண்டு உயிரெழுத்தாலும் இவ்வுயிரேறிய க ச த ந ப ம வ என்னும் ஏழு மெய்யெழுத்தாலும் ஆசிரியப்பா எட்டு வருவதும் அவ்வருக்க மாலையாம்.

"வருக்கத் தினைச்சொலல் வருக்க மாலை."

(இல - விள - பாட். ௬௬) (௩௬)

## செருக்கள வஞ்சி, வரலாற்று வஞ்சி முதலியன

மொய்யின் திறம் வஞ்சிப் பாவின் முடித்துரைத்தல்
செய்யின் செருக்கள வஞ்சியாம்—தையால்
வழியுரைத்தல் வஞ்சி வரலாறும் மற்று
மொழியுரைத்தல் தன்பெயரா மூண்டு.

(எ - ன்): செருக்களவஞ்சியும் வரலாற்றுவஞ்சியும் உரைத்து ஏனை வஞ்சிகளையு மாட்டெறிந் துரைத்தல் நுதலிற்று.

(இ - ள்.) செருக்களச் செய்திகளை வஞ்சிப்பாவாற் பாடிற் செருக்கள வஞ்சியாம். ஒரு பொருளின் வரலாற்றை வஞ்சிப் பாவாற் பாடின் வரலாற்று வஞ்சியாம். ஏனைப் பொருள்களையும் வஞ்சிப்பாவாற் பாடின் அப்பெயரானே வஞ்சி என்று வழங்கப் படும் எ - று.

(வி - ம்.) செருக்கள வஞ்சி:—யுத்தகளத்தில் நடந்த சண்டையை வஞ்சிப்பாவாற் பாடுதல்.

வரலாற்று வஞ்சி :—போர்க்களத்தில் செல்லும் படையெழுச்சியை வஞ்சிப்பாவாற் பாடுவது.

மற்றும் வஞ்சிப்பாவாற் பாடப்பெறும் புறத்திணைத் துறைப் பொருள்களை அவ்வத் துறைப்பெயராற் கூறப்படும்.

(உ - ம்.) நொச்சிவஞ்சி, காஞ்சிவஞ்சி, உழிஞைவஞ்சி, வாகைவஞ்சி, தும்பைவஞ்சி முதலாயின. (ருஎ)

## பரணி

மூண்ட அமர்க்களத்து மூரிக் களிறட்ட
ஆண்டகை யைப்பரணி யாய்ந்துரைக்க—ஈண்டிய
நேரடியோ யாதியா நீண்டகலித் தாழிசை
ஈரடிகொண் டாதியுட னிறு.

(எ - ன்): பரணி யிலக்கணங் கூறுதல் நுதலிற்று.

(இ - ள்.) செருக்களம்புக்குத் தனக்கூறுபாடின்றி மாற்றார் யானைபடப் போர்செய்தான் பரணிக்குப் பாட்டுடைத் தலைவனும். அவனைப் பாடுமிடத்து நாற்சீர் முதலாக எனைத்துச் சீரானும் கலித்தாழிசை யடித்தொகை யிரண்டின் மேலேறுமல், முதற்றொடங்கி முடிவளவும் பாடுக எ - று.

வெண்கலிப்பாவாற் பாடினும் இழுக்காது. (ருஅ)

ஈறில் வணக்கங் கடைநிலம்பேய் என்பனவும்
வீறுசா லையைக்கு மெய்ப்பேய்கள்—கூறித்
திறப்படச் சொல்லினவுஞ் செப்பின் பிறவும்
புறப்பொருள்நூல் கொண்டு புகல்.

(எ - ன்): இதுவுமது.

(இ-ள்.) பரணி பாடுமிடத்து, முற்படக் கடவுளரை வாழ்த்தி, பின்பு கடைதிறப்புக் கூறி, பாலைநிலத்தியல்பு கூறி, காளி கோட்டம் பாடி, கழுதினுண்மை பழுதறக் கூறி, காளிக்குக் கூளி சொல்லுமாறும், அவளதற்குச் சொல்லுவனவுமாகிய பிறவும் புறப்பொருளிலக்கணத்தின் முறைமை தோன்றச் சொல்லுக எ - று.

"பிறவும்" என்றதனாற் பாட்டுடைத் தலைவனைச் சிறப்பித்தலும், அவன் படையெடுத்துச் சென்றமுறையும், செரு முடித்தலும், கூழட்டன் முதலாயின வெல்லாங் கொள்க.

(வி - ம்.) பரணி :—போரில் ஆயிரம் யானைகளைக் கொன்று வெற்றி கொண்ட வீரரைப் புகழ்ந்து பாடுவது.

"ஆனை யாயிர மமரிடை வென்ற
மானவ னுக்கு வகுப்பது பரணி." (இல - விள - பாட். எஅ)

இது அளவடி முதலாக எல்லா வடியானும் இரண்டடிப் பஃறொழிசையாற் கீழ்க்கண்ட சூத்திரப்படி கடவுள் வாழ்த்து முதல் களம் விரும்பல் ஈறுகச் சொல்லல்பட்ட பொருளமையப் பாடுவது.

"கடவுள் வாழ்த்துக் கடைதிறப் புரைத்தல்
கடும்பாலை கூறல் கொடுங்காளி கோட்டம்
கடிகண மூரைத்தல் காளிக் கதிசொலல்
அடுபேய்க் கவள்சொல லதனால் தலைவன்
வண்புக ழுரைத்த லெண்புறத் திணையுற
ஈட்ட லடுகளம் வேட்ட லிவைமேல்
அளவடி முதலா வடியிரண் டாக
உளமகிழ் பரணி யுரைக்கப் படுமே."

"புறத்திணையுற ஈட்டல்" என்றதனால் பாட்டுடைத் தலைமகனைச் சிறப்பித்தலும், அவன் எடுத்துச் செலவுமுறைமையும் மேற் புறத்திணையிற் கூறிய முறையே செருமுடித்தலும், கூழட்டலும் முதலாயின வெல்லாஞ் சொல்லப்படும்.

(இல-விள-பாட். எக) (ருக)

## பெருங்காப்பியம்

புகரில் வணக்கம் பொருப்பறமே யாதி
பகர்தல் கடல்கோள் பருவம்—நிகரில்
தலைவனைக் கூறல் தபனனிந்து தோற்றம்
சிலைமணந்தோர் போரின் செயல். (சo)

செயலார் முடிசூடல் சேர்ப்புதல்வர்ப் பேறு
டயலார் பொழில்புனல்புக் காடல்—இயலுமூண்
மந்திரத்து தாடல் வருமிகல் விக்கிரமம்
சந்துசெல வும்பிறவுஞ் சார்ந்து. (சக)

சார்சுவையே பாவம் விளக்கி யினத்தொடுபாக்
கூருரையே பாடையே கொண்டிலம்பம்—நேர்சருக்கம்
நீப்பில் பரிச்சேதம் நேர்ந்துவரு மேற்பெருங்
காப்பியமா மென்று கருது.

(எ - ன்): பெருங்காப்பிய முணர்த்துதல் நுதலிற்று.

இம்மூன்று செய்யுளுக்கும் பொருள் விளங்கிக் கிடந்தமையின் பொருள் விரித்துக்கொள்க.

பொருப்பாதி: தசாங்கம். அறமாதி: அறம், பொருள், இன்பம், வீடு. பருவம்: கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில். தபனனிந்து தோற்றம்: சந்திராதித்தர் தோற்றம். ஊண்: காமபானம், வீரபானம். சுவை: சிங்காரம், பெருநகை, கருணை, வீரம், கோபம், பயம், அற்புதம், குற்சை, சாந்தம்.

(வி - ம்.) பெருங்காப்பியம்:—கீழ்க்கண்ட சூத்திரத்தின் படி இலக்கணம் அமைந்தது.

'பெருங்காப் பியநிலை பேசுங் காலை
வாழ்த்து வணக்கம் வருபொரு ளிவற்றினொன்
றேற்புடைத் தாக முன்தர வியன்று
நாற்பொருள் பயக்கும் நடைநெறித் தாகித்
தன்னிக ரில்லாத் தலைவனை யுடைத்தாய்
மலைகடல் நாடு வளநகர் பருவம்
இருசுடர்த் தோற்றமென் றினையன புனைந்து
நன்மணம் புணர்தல் பொன்முடி கவித்தல்
பூம்பொழில் நுகர்தல் புனல்விளை யாடல்
தேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல்
புலவியிற் புலத்தல் கலவியிற் களித்தலென்
றின்னன புனைந்த நன்னடைத் தாகி
மந்திரந் தூது செலவிகல் வென்றி
சந்தியிற் றொடர்ந்து சருக்க மிலம்பகம்
பரிச்சேத மென்னும் பான்மையின் விளங்கி
நெருங்கிய சுவையும் பாவமும் விரும்பக்
கற்றோர் புனையும் பெற்றிய தென்ப."

(இல - விள - அணி. ௯) (சஉ)

## காப்பியம், புராணம்

கருதுசில குன்றினுமக் காப்பியமா மென்பர்
பெரிதறமே யாதி பிழைத்து—வருவதுதான்
காப்பிய மாகுங் குலவரவு காரிகை
யாப்பிற் புராணமே யாம்.

(எ - ன்): பெருங்காப்பியத்தி னொழிபும், காப்பியமும், புராண கதையுங் கூறுதல் நுதலிற்று.

(இ - ள்.) பெருங்காப்பியத்திற்கு எடுத்தோதிய அறமுதல் நான்கும் ஒழிந்து, அல்லா வுறுப்புக்கள் சில குறையினும் இழுக்காது. மேற்கூறியவற்றுள் தர்மார்த்த காம முத்தியெனு நான்கனுட் சில குறைந்து வந்தால், காப்பியமாம். குலவரவு முதலியனவற்றைக் காட்டுவது புராண கதையாம் எ - று.

(வி - ம்.) குலவரவு முதலாயினவற்றை என்றதனால் உலகத் தோற்ற ஒடுக்கங்களும், மனுவந்தரமும், முனிவர் வரலாறும், அரசர் மரபும், அவர் சரிதமும் கொள்க.

காப்பியம் :—அறம், பொருள், இன்பம், வீடென்னும் நான்கும் பயவாது சில குறைபாடுள்ளது. இது சிறுகாப்பியமெனவும் படும். காப்பியம் எனினும் காவியம் எனினும் ஒக்கும்.

(உ - ம்.) நைடதம், சூளாமணி முதலியன.

"அறமுத னான்கிற் குறைபா டுடையது
காப்பிய மென்று கருதப் படுமே." (இல-விள-அணி. கக)

புராணம் :—மனுவந்தரம், உலகத்தோற்றம் முதலாயினவற்றைக் கூறுவது.

(உ - ம்.) கூர்ம புராணம், பாகவத புராணம் முதலாயின.
(௬௩)

## அகலக் கவிகளில் சிலவற்றிற்குச் சிறப்பு

ஆய வகப்பொருண்மே லாசிரியப் பாவினுள்
மேயசீர் வஞ்சியடி மேவாது—தூய
அகப்பொருண்மே லன்றி யருங்கலிகள் வாரா
தொகப்பெரு வஞ்சி தொடர்ந்து.

(எ - ன்): அகப்பொருள் சொல்லும் ஆசிரியப்பாவிற் புகப் பெறுவடியும், அகப்பொருண்மேல் மிகப்பெருகி வரும் பாவும், யாதானுமொரு பொருண்மேல் வரப்பெறும் பாவும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அகப்பொருள் சொல்லும் ஆசிரியப்பாவில் வஞ்சி யடி விரவப்பெறு; அகப்பொருண்மேலன்றிக் கலிப்பாப் பெரும் பான்மையும் வரப்பெறு; வஞ்சி தனித்துநின்று பொருள் சொல் லாத் துணையல்லது தொகையா வரப்பெறு எ - று.

(வி - ம்.) "அகப்பொருள் கூறு மாசிரி யத்துப்
புகப்பெறு வஞ்சி யடிபொரு ளன்றி
மிகக்கலி வாரா மேலும் வஞ்சி
தொகைப்பெறு தனித்துச் சொல்லப் படுமே."
(இல - விள - பாட். ககரு) (சச)

## அகலக்கவியின் பெயர்கள் வருமாறு

தொடர்ந்த பெயர்கள் தொழிலளவு காலம்
இடம்பொருள் பாவுறுப்போ டெல்லை—நுடங்கிடையாய்
பாடினன் பாடுவித்தான் பாடப் படுபொருளான்
நீடும் பிறவு நிறைந்து.

(எ - ன்): அகலக்கவிக்குப் பெயர் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தொழிலானும், அளவானும், காலத்தானும், இடத் தானும், பொருளானும், பாவானும், உறுப்பானும், எல்லையானும், பாடினன் பெயரானும், பாடுவித்தான் பெயரானும், பாடப்படும் பொருளானும், பிறவாற்றானும், அகலக் கவிக்குப் பெயரிடப்படும், எ - று.

அவற்றுள் யானைத்தொழில் என்னும் பெயர் தொழிலால் வந் தது. பன்னிருபடலம், நூற்றந்தாதி, குறுந்தொகை, நெடுந் தொகை என்பன அளவுபற்றி வந்தன. கார்நாற்பது முதலாயின காலம்பற்றி வந்தன. களவழியும், ஐந்திணையும் இடம்பற்றி வந்தன. அகம், புறம் என்பன பொருள்பற்றி வந்தன. கலித் தொகை, வெண்பாமாலை என்பன பாப்பற்றி வந்தன. அங்கமாலை, நயனப்பத்து, பயோதரப்பத்து என்பன உறுப்புப்பற்றி வந்தன. பாதாதிகேசம், கேசாதிபாதம் என்பன எல்லைபற்றி வந்தன.

தொல்காப்பியம், அவிநயம், கல்லாடம் என்பன பாடினுனைப் பற்றி வந்தன. பாண்டிக்கோவை முதலாயின பாடுவித்தானைப் பற்றி வந்தன; வச்சணந்திமாலையும் அற்று. கந்தபுராணம், கூர்ம புராணம் என்பன பாடப்படும் பொருள்பற்றி வந்தன. பிறவும் என்பதனால் இடுகுறியாற் பெயர் பெற்றனவுமுள, அவை கலைக் கோட்டுத்தண்டு முதலியன.

(வி - ம்.) முதலியன என்றது நிகண்டு முதலியவற்றை.

அகலக்கவி :—மேற்கூறியபடி பெயர் பெறுவதன்றி வேறு வகை பற்றியும் பெயர்பெறும்.

அவை வருமாறு :—

1. பொருள் பற்றி வந்தவை - ஆசாரக் கோவை முதலியன.

2. இடம்பற்றி வந்தவை-மதுரைக் காஞ்சி, பட்டினப்பாலை முதலியன.

3. காலம் பற்றி வந்தவை - வேனில் விருத்தம், வசந்தமாலை முதலியன.

4. தொழில் பற்றி வந்தவை - யானைத் தொழில், ஊசல் முதலியன.

5. உறுப்புப்பற்றி வந்தவை - பயோதரப்பத்து, நயனப்பத்து முதலியன.

6. எல்லைபற்றி வந்தவை-கேசாதி பாதம், பாதாதி கேசம்.

7. செய்தோன் பெயர்பற்றி வந்தவை - அகத்தியம், தொல் காப்பியம் முதலியன; பிறவும் அன்ன.

8. செய்வித்தோன் பெயர்பற்றி வந்தவை பாண்டிக்கோவை முதலியன.

"பொருளிடங் காலந் தொழிலுறுப் பெல்லை
செய்தோன் செய்வித் தோன்பெய ராலே
எய்து மகலக் கவிக்கிரும் பெயரே."

(இல - விள - பாட். கககு) (சகு)

## கமகன், வாதி

நிறைமதியால் கல்வியால் நீள்கலைகள் கல்லா
தறையு மவன்கமக னுகும்—முறைமேற்கோள்
புல்லு மெடுத்துக்காட் டேது புகலுமவன்
நல்வாதி யென்றே நவில்.

(எ - ன்): கமகனிலக்கணமும் வாதியிலக்கணமும் கூறுதல் நுதலிற்று.

(இ - ள்.) தன்னுடைய ஞான விசேடத்தாலே யாதல், கல்விப் பெருமையாலே யாதல், ஒருவன் சொல்லிய நூல் விகற்பத்தைத் தான் பயிலாதிருந்தும் பொருள் விரிக்க வல்லான் கமகனும். எடுத்துக்கொண்ட கோளுக்குப் பொருந்தின மேற்கோளும், காரணமும், அவையிரண்டிற்கும் பொருந்தின எடுத்துக் காட்டுஞ் சொல்லி முடிப்பான் வாதியாம்.

மேற்கோள், காரணம், எடுத்துக்காட்டென்னுத அம் முறையன்றிக் கூற்றால் விதண்டாவாதம், சர்ப்பவாத மென்னுங் கடியத் தக்க விகற்ப வாதங்க ளுளவென வுணர்ந்துகொள்க.

(வி - ம்.) உண்மை யுணர்தல் வேட்கை யுடையான் கதை வாதமாம். காதல் மிரண்டுள்ளதன்கண் வெல்லும் வேட்கையுடையான் கதை சர்ப்பமாம். தன் கோட்பாட்டை நிலைநிறுத்தாத கதை விதண்டையாம்.

கமகன் :—ஞாபகத்தாலேனும், கல்விப் பெருமையாலேனும் எப்பொருளையும் எடுத்துக் கூறுவோனுவன்.

"ஞாபகஞ் செம்பொருள் நடையினெப் பொருளும்
அறைகுவோன் கமகனும் வழுத்துங் காலே."

(முத்துவீரி. யாப். கூ௨)

வாதி :—ஏது, மேற்கோள் எடுத்துக் காண்பித்து, தன் கோட்பாட்டை நிறுத்திப், பிறன் கோட்பாட்டை மறுத்துக் கூறுவோனுவன்.

"ஏதுமேற் கோளு மெடுத்துக் காட்டித்
தன்கோள் நிறீஇப் பிறன்கோள் மறுப்போன்
வாதி யாமென வைக்கப் படுமே."

(முத்-வீரி. யாப். கூ௩) (சகூ)

## வாக்கி

நவிலு மறமுதல் நான்குமயங் காமல்
புவியதனிற் கேட்டோர் புகழக்—கவிப்பனுவல்
குன்றாத சொல்லால் தெளிவுபெறக் கூறுவோன்
நன்றாய வாக்கியென் றார்.

(எ - ன்): வாக்கி யிலக்கணம் வகுத்துணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அறம், பொருள், இன்பம், வீடென்பன தம்மில் விரவாமற் கேட்டோர் விரும்ப இலக்கணத்தையாதல், இலக்கியத்தையாதல், செஞ்சொல்லால் விளங்கச் சொல்வான் வாக்கியாம் எ - று.

(வி - ம்.) வாக்கி :—அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நாற்பொருட் பயனையும், கேட்போர் விரும்ப இனியன கூறும் ஆற்றலுடையானுவன்.

"அறம்பொரு ளின்பம்வீ டாகிய நான்கும்
கேட்போர் வேட்ப இனியன ளைத்தும்
ஆற்ற லுடையோன் வாக்கியா மெனலே."

(முத் - வீரி - யாப். சுச) (சஎ)

## புன்கவிஞர்

ஆரொருவன் பாக்களை யாங்கொருவ னுக்களிப்போன்
சோரகவி சார்த்தொலியிற் சொல்லுமவன்—சீரிலாப்
பிள்ளைக் கவிசிறந்த பின்மொழிக்காம் புன்மொழிக்காம்
வெள்ளைக் *கவியவனின் வேறு.

(எ - ன்): புன்கவிஞர் நாற்பகுதியரென் றுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒருவன் பாட்டை மற்றொருவனுக்குக் கொடுப்போன் கள்ளக்கவியாம். ஒருவன் கவியிசையில் வேறொரு செய்யுட் புணர்ப்போன் சார்த்துக் கவியாம். தனக்கென ஒன்றின்றி முன்னோர் மொழிந்த சொன்னடை பொருணடை கண்டு கவிபாடுவோன் பிள்ளைக் கவியாம். புன்மொழிகளா லொன்று கவிபாடுவோன் வெள்ளைக் கவியாம் எ - று. (சஅ)

### இரண்டாவது செய்யுளியல்

முற்றிற்று.

---

* கவியதனின் எனவும் பாடம்.

## மூன்றாவது பொதுவியல்

### நாற்பாச் சாதி யிடம் நிறம்

வேறுமறை யோராதி நாற்சாதி வெள்ளைமுதல்
கூறுநிலை முல்லை குறிஞ்சியே—மாறு
மருதநிலம் நெய்தல்நிறம் வான்மையே செம்மை
கருதரிய பொன்மையே கார்.

இவ்வியலென்ன பெயர்த்தோ வெனின், முதன்மொழி யியலிற்கும், செய்யுளியலிற்கும் பொதுவாகிய பொருளை யுணர்த்தினமையிற் பொதுவிய லென்னும் பெயர்த்து. இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், முற்கூறிப்போந்த ஆசு முதலாகிய நான்கு கவிகட்கும் முதற் காரணமாயுள்ள வெண்பா முதலிய நான்கு பாவிற்கும் சாதியும், இடமும், நிறமும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வெண்பா: மறையோர் சாதி; இதற்கு நிலம் முல்லை; நிறம் வெண்மை. ஆசிரியப்பா: அரசர் சாதி; இதற்கு நிலம் குறிஞ்சி; நிறம் செம்மை. கலிப்பா: வணிகர் சாதி; இதற்கு நிலம் மருதம்; நிறம் பொன்மை. வஞ்சிப்பா: சூத்திர சாதி; இதற்கு நிலம் நெய்தல்; நிறம் கருமை எ - று.

(வி-ம்.) (1) சாதியுரிமை :—வெண்பா அந்தணர்க்கும், ஆசிரியப்பா அரசர்க்கும், கலிப்பா வணிகருக்கும், வஞ்சிப்பா சூத்திரர்க்கும் உரியனவாம்.

"மறையோர் மன்னர் வணிகர் சூத்திரர்க்கு
முறையான் வெள்ளை முதனான் கெய்தும்."

(இல - விள - பாட். கசஎ)

(2) இடவுரிமை (நிலவுரிமை):—வெண்பா முல்லை நிலத்துக்கும், ஆசிரியப்பா குறிஞ்சி நிலத்துக்கும், கலிப்பா மருத நிலத்துக்கும், வஞ்சிப்பா நெய்தல் நிலத்துக்கும் உரியனவாம்.

"முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல்
வெள்ளை முதற்பா வினுக்குரி யனவே."

(இல - விள - பாட். கசஅ)

குறிஞ்சித்திணை முற்கூறப் பெறாத முறையல கூற்றானே பாலைத்திணைக்கு மருட்பா உரித்தாதல் கொள்க.

(3) நிறவுரிமை:—வெண்பாவிற்கு வெண்மையும், ஆசிரியப் பாவுக்குச் சிவப்பும், கலிப்பாவுக்குப் பொன்மையும், வஞ்சிப்பா வுக்குக் கருமைநிறமும் உரியனவாம்.

"வெண்மை செம்மை பொன்மை கருமை
யுண்மை நிறம்பா வொருநான் கினுக்கே."

(இல - விள - பாட். கககூ) (க)

## நாற்பா நாள் இராசி

கார்த்திகை மாசிபனை குன்றுதி காட்டுகநாள்
மூத்த விராசிநான் மூன்றினையும்—நீர்த்தசீர்
மேதினிமே லாசிரியம் வஞ்சிகலி வெள்ளையென
ஓதியமே டாதியா லோட்டு.

(எ - ன்): மேற்கூறிய பாக்களின் நாளும், இராசியும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) கார்த்திகை முதல் ஆயிலியமீறாகிய எழுநாளும், கர்க்கடகம் விருச்சிகம் மீனமென்னு மூன்றிராசியும் வெண்பா விற்காம். மகமுதல் விசாக மீறாகிய எழுநாளும், மேஷம் சிங்கம் தனுசு என்னும் மூன்றிராசியும் ஆசிரியப்பாவிற்காம். அனுட முதல் அவிட்ட மீறாகிய எழுநாளும், மிதுனம் துலாம் கும்ப மென்னும் மூன்றிராசியும் கலிப்பாவிற்காம். சதயமுதற் பரணியீ றாகிய ஆறுநாளும், இடபம் கன்னி மகரமென்னும் மூன்றிராசியும் வஞ்சிப்பாவிற்காம் எ - று.

(வி - ம்.) மாசி - மகநாள். பனை - அனுடநாள். குன்று - சதயநாள், 'வெள்ளை' கார்த்திகை ஆதிநாள் நால் மூன்றினையும் காட் டுக எனவும் மூத்த இராசி மூன்றினையும் ஓட்டு எனவும் அங்வயித்து அதற்கேற்பப் பொருள் கொள்க.

பொருள் கொள்ளுதலாவது:—வெள்ளைக்குக் கார்த்திகை முதல் ஆயிலியம் ஈறாகிய நட்சத்திரங்கள் எழும் தெரிவிக்க. நாள் - நட்சத்திரம், நால் மூன்று - உம்மைத் தொகையாய் நாலும் மூன்றும் என எழாயிற்று. மூத்தவிராசி நால் மூன்றினையும் ஓட்டு - முதிர்ந்த இராசியை நான்கு பாவிற்கும் மும்மூன்றாகச் செலுத்துக. மற்றவற்றிற்கும் இவ்வாறே பொருள் கொள்க. நீர்த்த சீர் மேதினி மேல்-நீர்மைவாய்ந்த சிறப்புடைய இவ்வுலகில். ஓதிய மேடாதியால் - சொல்லிய மேட முதலியவற்றால். மேடம் என்புழி அம் : கடைக்குறை.

'வெள்ளை ஆசிரியம் கலி வஞ்சி' என்றது 'ஆசிரியம், வஞ்சி, கலி, வெள்ளை' யென முறையல கூற்றாற் கூறினமையால் ஏற்ற பெற்றி கொள்க

நாளுரிமை :-வெண்பாவிற்குக் கார்த்திகை முதல் ஆயிலியம் வரை எழும், ஆசிரியப்பாவிற்கு மகம் முதல் விசாகம் வரை எழும், கலிப்பாவுக்கு அனுடமுதல் அவிட்டம் வரை எழும், வஞ்சிப்பா வுக்குச் சதயம் முதல் பரணி வரை ஆறும் ஆகிய நாட்களுரியன வாம்.

"கார்த்திகை முதலாக் கட்செவி காறும்
சீர்த்தகு வெண்பாச் சிறந்த நாளே."

(இல - விள - பாட். கஉ0)

(கட்செவி - ஆயிலியம்)

"மகமுதல் விசாக வரையக வற்கும்
பனைமுதல் புள்வரை பகர்ந்திடு கலிக்கும்
சதய முதல்சோ றளவும் வஞ்சிக்கும்
உரிய வென்ப வுணர்ந்திசி னோரே."

(இல - விள - பாட். கஉக)

பனை - அனுடம், புள் - அவிட்டம், சோறு - பரணி.

இராசியுரிமை :—வெண்பாவுக்குக் கற்கடகம் விரிச்சிகம் மீனம் ஆகிய மூன்றும், ஆசிரியப்பாவுக்கு மேடம் சிங்கம் தனுசு ஆகிய மூன்றும், கலிப்பாவுக்கு மிதுனம் கும்பம் துலாம் ஆகிய மூன்றும், வஞ்சிப்பாவுக்கு ரிஷபம் கன்னி மகரம் ஆகிய மூன்றும் உரியனவாம்.

"கற்கட கந்தேண் மீன மூன்று
முற்படு பாவி னிற்படு மிராசி
மேடமுஞ் சிங்கமும் வேணுவு மகவற்
பாடுறு மிதுனமுந் துலையுங் கும்பமும்
கலிக்குரித் தாகு மிடபமுங் கன்னியும்
ஒலிப்படு மகரமும் வஞ்சிக் குரிய."

(இல - விள - பாட். கஉஉ)

தேள் - விரிச்சிகம், வேணு - தனுசு, துலை - துலாம். (உ)

## நாற்பாத் தேவதையாதி

ஒட்டுமதி பொன்வெள்ளை யொண்கதிரோன் சேயகவல்
காட்டியமால் காரி கலிக்காகும்—ஈட்டும்
புகர்பாம்பு வஞ்சிக்காம் பூவிரையோ டாடை
பகர்நிறத்தாற் கொள்கவணி பாட்டு.

(எ - ன்): மேற்கூறிய பாவிற்கு அதிதேவதையும், புஷ்பமும், சந்தனமும், வஸ்திரமும், ஆபரணமும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வெண்பாவிற்குச் சந்திரனும், வியாழமும்; ஆசிரியப்பாவிற்கு ஆதித்தனும், செவ்வாயும்; கலிப்பாவிற்குப் புதனும், சனியும்; வஞ்சிப்பாவிற்குச் சுக்கிரனும், இராகு கேதுக்களும் அதிதேவதைகளாம். புஷ்பமும், சந்தனமும், வஸ்திரமும், ஆபரணங்களும் முன்சொன்ன நிறப்பகுதியினாலேயே கொள்க எ - று.

(வி - ம்.) முன்சொன்ன நிறப்பகுதியாவது வெண்பாவிற்கு வெண்மையும், ஆசிரியப்பாவுக்குச் செம்மையும், கலிப்பாவிற்குப் பொன்மையும், வஞ்சிப்பாவிற்குக் கருமையும் கொள்க.

நாற்பாத் தேவதையாதி (கிரகவுரிமை முதலியன):—வெண்பாவுக்குச் சந்திரனும், பிரகஸ்பதியும்; அகவலுக்குச் சூரியனும், செவ்வாயும்; கலிப்பாவுக்குப் புதனும், சனியும்; வஞ்சிப்பாவுக்குச் சுக்கிரனும், இராகுவும், கேதுவும் உரியவராவர்.

"திங்கள் வியாழஞ் செங்கதிர் செவ்வாய்
புந்திகன் மந்தன் புகர்பெறும் பாந்தள்
வெள்ளை முதலான் கினுக்கு மிரண்டிரண்
டெள்ளா வகையாற் கொள்ளுங் கோளே."

(இல - விள - பாட். கஉரு)

பூ, சாந்து, வஸ்திரம், ஆபரணம் ஆகிய இவைகள், அவ்வப்பாவின் நிறத்திற்கிசைய இருக்கவேண்டும்.

"பூவுஞ் சாந்துங் கலையு மணியும்
பாவின் நிறமெனப் பாத்தனர் கொளலே."

(இல - விள - பாட். கஉச) (ரு)

## பாடும் விதம்

பாட்டுடையோ னூர்ப்பே ரியற்பேர் படவெதுகை
நாட்டிடினு மப்பேர் நவிலடியின்—காட்டுமுதற்
சேர்ந்த வனுவாகச் சீர்முன் னியற்றிடினும்
வாய்சிறப் பென்கை வழக்கு.

(எ-ன்): பாடும்விதம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) பாட்டுடைத் தலைவன் ஊர்ப் பெயரினையாயினும், இயற்பெயரினையாயினும் அடிமுற்சீரிலே நிறுத்தி எதுகைத் தொடர்பட வைப்பினும், வருக்க முதலிய அனு வெதுகைத் தொடர்பட வைப்பினும் சிறப்பாம் எ - று.

(வி - ம்.) "தலைவன் பேரூர் சாதித் தெதுகையில்
நிலையுற லனுவி னிறுத்தல் சிறப்பே."
(இல - விள - பாட். க௨௫) (௪)

## உறுப்புச்செய்யுள்

வழக்குள் மரபியலுள் நேர்ந்து வழுவா
திழுக்கி வடவெழுத்தை யின்பம்—வழுக்காது
முன்னையோர் பாட்டிற் பயின்ற மொழியன்றே
சொன்ன வுறுப்பின் துணிபு.

(எ - ன்): உறுப்புச்செய்யுள் நெறி யுணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்.) வழக்கினேடும், மரபியலோடும், பொருத்தமுடையவாய், வடவெழுத்துக் கலவாது, கேட்டோர்க்கு மிகவுமின்பம் பூரிக்குஞ் சொல்லாகச் சான்றோர் செய்யுட்களில் எடுத்துக் காட்டுஞ் சொற்களாற் புணர்க்கப்படுவன உவப்புச் செய்யுளாம் எ - று. (௫)

துணிதற் கரிது பொருளென்றுஞ் சோர்வு
பணிவுற்ற சொன்மேற் பகுத்தும்—அணிபொருட்டால்
மற்றுமுண் டென்று முரைப்போர் வழூச்சொல்லின்
இற்றன்றே பாவி னிழுக்கு.

(எ - ன்): குற்றப்படாமற் பாக்களைப் புணர்க்கென்றுணர்த்தல் நுதலிற்று.

(இ - ள்.) நிச்சயித்தற்கரிய பொருளுடையவாயினும், எடுத்தேறுபட்ட சொல்லுடைய வாயினும், பல பொருளுக்கேற்ற சொல்லுடைய வாயினும் பொருந்திற் குற்றமாம் எ - று.

எடுத்தேறுசொல் - இடிபோன்ற சொல்.

(வி - ம்.) "தெளிந்த வழக்கொடு சிறந்த பொருள்படூஉம்
இன்ப மொரீஇவட வெழுத்தே மிக்கு
முதிர்சொற் புணர்க்கா தெதிர்சொற் புணர்த்து
மாலுறச் செய்தல் வழுவா மென்பர்."
(இல - விள - பாட். கஉசு) (சு)

## அகலக்கவி புகல்வோர்

இழுக்கிலா நாற்குலத்தோ ரெப்பொருளுந் தேர்ந்தோர்
ஒழுக்கறந் தெய்வ முடையோர்—விழுக்கவிகள்
ஈரிரண்டு முத்தமிழும் வல்லோரே யெஞ்ஞான்றும்
சீரார் கவியுரைப்போர் சென்று.

ஒழுக்கு - ஒழுக்கம் (நன்னடை). அறம் - தருமம். தெய்வம் - தெய்வ வழிபாடு. (எ)

சென்றவிரு பான்தொடங்கிச் சேருமெழு பானளவும்
நின்றபரு வத்துறுப்பு நீங்காதோர்—ஒன்றில்
அகலாப் பிணியில்லோ ரன்றேபாக் கொண்டு
புகலப் பெறுவார் புகழ்ந்து.

(எ - ன்): அகலக்கவி புகல்வோர் இவரென்றுணர்த்துதல் நுதலிற்று.

இவ்விரு செய்யுளையும் விரித்துரைத்துக் கொள்க.
இக் குணமில்லாதார் பாடலாகா தென்பதாம். (அ)

## நல்லவை

புகழுந் தருமநெறி நின்றோர்பொய் காமம்
இகழுஞ் சினஞ்செற்ற மில்லோர்—நிகழ்கலைகள்

எல்லா முணர்ந்தோ ரிருந்த விடமன்றே
நல்லா யவைக்கு நலம்.

(எ - ன்): அகலக்கவி கேட்பிக்கும் நல்லவை, நிறையவை யென்னும் இரண்டனுள், நல்லவை கூறுதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்விலக்கண முடையோர் அவை நல்லவையாம்.

நிறையவை

நலனடக்கஞ் செம்மை நடுவுநிலை ஞானம்
குலனென் றிவையுடையோர் கோதில்—புலனில்லோர்
சென்று மொழிந்தனவுங் கேட்போர் செறிந்தவிடம்
அன்றே நிறைந்த அவை.

(எ - ன்): நிறையவை கூறுதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்விலக்கண முடையோர் அவை நிறையவையாம்.

அவையுடையோரும் குலனுடையோராதல் சிறப்பு.

(வி - ம்.) "ஆறுட் பகைசொற் றருங்கலை யோர்ந்து
பாரிற் கீர்த்தி படைத்தோர் வைகுதல்
நல்லவை யடக்கம் வாய்மை நடுநிலை
சொல்லு நன்மை யுடையோர் தொகைஇ
வல்லார் மொழியினும் வல்லுந ராக்கிக்
கேட்போ ருறையவை நிறையவை யாகும்."

(இல - விள - பாட். கஎசு) (கO)

தீய அவை

அவையின் திறமறியா ராய்ந்தமர்ந்து சொல்லார்
நவையின்றித் தாமுரையார் நாணர்—சுவையுணரார்
ஆய கலைதெரியா ரஞ்சா ரவரன்றே
தீய அவையோர் செருக்கு.

(எ - ன்): தீய அவை புணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்விலக்கணத்தையுடையோர் அவை தீயஅவையாம்.

இவர்முன் கவி கேட்பிக்கலாகா தென்பதாம். (கக)

### அந்தணரியல்பு

குன்ருநா லங்கைமறை கோவணங்கோன் முத்தீயும்
நன்ருய வேள்வி நளினமும்—அன்றிக்
குடைசமிதை குண்டிகைபுற் கோத்திரமென் றின்ன
உடையாரை யந்தணரென் றுன்னு.

உன்ன லரன்கழலை யோங்கியசி ரங்கியயன்
என்னவுவ மித்த லிவரென்றே—நன்மறைகள்
ஓதலே யோதுவித்தல் வேட்டலே வேட்பித்தல்
ஈத லிரத்தலென் றேத்து.

(எ - ன்): நாற்குல மென்றவற்றுள் அந்தணரியல்பு கூறுதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்விலக்கணமுடையோர் அந்தணர் எ - று.

(வி - ம்.) கோல் - முக்கோல். முத்தீ-ஆகவனீயம், காருக பத்தியம், தக்ஷிணாக்கினி என்பன. (கஉ, கங)

### மன்ன ரியல்பு

ஏத்திய பூவைநிலை யெல்லோன் கழல்வாழ்த்தல்
காத்தன்முடி சூட்டல் களம்வேட்டல்-தீத்தொழில்கள்
வெண்குடைசெங் கோல்கவரி வெற்றியரி யாசனமும்
மண்குலவு மன்னர் வளம்.

வளர்த்தல் குடிகமையஞ் சாதுரங்கம் வாய்மை
விளைத்தல் பொருணெறியா மெய்ந்நூல்—அளத்தலே
உம்ப ருவமை யுரைகோ ளிவையுடையார்
இம்ப ருலகுக் கிறை.

(எ - ன்): மன்ன ரியல்புணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இப்பெற்றி யுடையோர் மன்னர் எ - று.

(வி - ம்.) பூவைநிலை யெல்லோன் - திருமால். கழல் - திருவடி. களம் வேட்டல் - களவேள்வி. அரியாசனம் - சிங்காதனம்.

குடிவளர்த்தல் - குடிமக்களை விருத்தியாக்குதல். கமையம் - பொறுத்தல். சாதுரங்கம் - நால்வகைச் சேனை. சதுரங்கம் என்பது சாதுரங்கம் என்ருயது. (கரு, கசு)

## பூவைசிய ரியல்பு

இறையஞ்சா தேருழல் வித்திதல் புரிந்து
மறைகொண் டழல்வளர்த்து வாய்மை—பொறையுடைமை
என்றிவையுங் காத்து நிரையோம்ப லென்பவே
குன்ரு வணிகர் குணம்.

(எ - ன்): பூ வைசியர் தன வைசியர் என்பவர்களுட் பூவைசியரியல்பு கூறுதல் நுதலிற்று.

(இ - ள்.) இப்பெற்றியுடையார் பூவைசியராம் எ - று.

(வி - ம்.) அழல் வளர்த்தல் - அக்கினி காரியம் செய்தல். நிரையோம்பல் - பசு மந்தையைப் பாதுகாத்தல். (கசு)

## தனவைசிய ரியல்பு

குணங்கோடாக் காத்தல் கொழுநிதிக்கோன் றன்னை
வணங்க லவன்புகழே வாழ்த்தல்—அணங்கார்
இடத்தேகி வாணிகத்தா லீட்டலெரி வேட்டல்
படைத்தோர் வணிகரென் பார்.

(எ - ன்): தனவைசியர் செய்தி கூறுதல் நுதலிற்று.

(இ - ள்.) இப்பெற்றியுடையோர் தனவைசியராம் எ - று. (கஎ)

## சூத்திர ரியல்பு

பார்திகழு மூவர் பணித்த பணியொழுகல்
ஏருழுத லீதல் பிழையாமை—பார்புகழக்
கோட்ட மிலாமை யொருமைக் குணம்பிறவும்
காட்டினர் சூத்திரர்தம் கண்.

(எ - ன்): சூத்திரர் செய்தி கூறுதல் நுதலிற்று.

(இ - ள்.) இப்பெற்றியுடையோர் சூத்திரராம் எ-று. (கஅ)

### சிறப்புப்பாயிர இலக்கணம்

கண்ணுய தெய்வ மிறைஞ்சிக் கருதுநூல்
பண்ண அதிகாரம் பாரித்தல்—என்னும்
மதியோர் சிறப்பென்பர் வானவரை வாழ்த்தா
அதிகார முஞ்சிறப்பென் ருக்கு.

(எ - ன்): அகலக்கவிக்கு இன்றியமையாத பாயிரங்களுள், சிறப்புப்பாயிரங் கூறும்வகை யுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தெய்வ வணக்கமும், அதிகாரமும் புணர்த்துரைப்பதும், அதிகார மொன்றுமே யுரைப்பதுஞ் சிறப்புப் பாயிரமாம் எ - று.

(வி - ம்.) "வணக்க மதிகார மென்றிரண்டுஞ் சொல்லச்
சிறப்பென்னும் பாயிர மாம்"

"தெய்வ வணக்கமுஞ் செயப்படு பொருளும்,
எய்த வுரைப்பது தற்சிறப் பாகும்"

என்ருராகலின். (கக)

ஆக்கியோன் பேர்வழி யேயெல்லே யாப்பந்நூற்
போக்கிடஞ்சொல் வோர்நுதலிற் ருயபயன்—தாக்கிய
எட்டினெடுங் காலங் களங்கா ரணமியம்பப் [விவ்
பட்டாலு மப்பெயரே பன்னு.

(எ - ன்): இதுவுமது.

(இ - ள்.) ஆக்கியோன் பெயர் முதல் பயனீருகிய எட்டும் உரைப்பதும், இவற்றுடன் காலம், களன், காரணம் என்னும் மூன்றும் கூட்டி யுரைப்பதும் சிறப்புப்பாயிரமாம் எ - று. (உ0)

பன்னிய நூற்பேர் பகர்ந்தோன்பேர் காரணமும்
துன்னும் பயனளவுஞ் சொல்லினும்—முன்னேச்
சிறப்பா மவற்றுட் சிலவேறி னுலும்
பெறப்படுமா முன்னேப் பெயர்.

(எ - ன்): இதுவுமது.

(இ - ள்.) இவ்வைந்தங் கூறுவதும், இவற்றுடன் முன்னையவற்றுட் சிலவேறக் கூறுவதும் அச் சிறப்புப் பாயிரமே யாம் எ-று.

(வி - ம்.) சிறப்புப் பாயிரமாவது :—நூலின் பெயர் இன்னதென்றும், அதைச்செய்தவர் இன்னரென்றும், அதில் கூறும் பொருளின்னதென்றும், அஃது இக்காலம், இன்னார்முன், இச்சபையில் அரங்கேற்றப்பட்டதென்றும், இன்ன காரணத்தால் பாடப்பட்டதென்றும், அது இன்ன முதனூலை யநுசரித்தியற்றியதென்றும், அதை இயற்றுவதில் இவரிவர் இவ்விவ்வுதவி புரிந்தாரென்றும், அதைப் பார்வையிட்டவர்கள், கேட்டவர்கள், சொன்ன சாத்துக்கவிகள் இவையென்றும் விவரமாய்க் கூறி விளக்குவது.

இதன் விரி எழுத்தோத்தினுட் கூறியவாற்ருன் உணர்க. (உக)

## பொதுப்பாயிரந்திலக்கணம்

பெயரார்நூ லீவோ னியல்பீயும் பெற்றி
அயராது கொள்வோ னளவும்—அயர்வின்றிக்
கோடன்மர பீரிரண்டுங் கூறல்பொ துப் பாயிரமாம்
பாடல்சால் நூலின் பயன்.

(வி - ம்.) பொதுப்பாயிரம் :—ஆசிரியன், மாணக்கர் ஆகிய இவருடைய இலட்சணங்கள் இவையென்றும், இவற்றிலும் நல்லவை இவை, தீயவை இவை யென்றும், இவ்வகையாய்ப் போதிக்க வேண்டுமென்றும் விரிப்பதாகும். (உஉ)

பயனான்காய் மூவகைத்தாய்ப் பன்மூன் றுரைத்தாய்
இயலுடைத்தாய் மூவாம லேழு—செயன்மதத்தாய்ப்
பத்தாய்க் குணங்குற்றம் பத்தொழிந் தெண்ணான்காம்
உத்தியது நூலென் றுரை.

(வி - ம்.) 'பயன் நான்காய்' என்றது அற முதலிய நான்கு பயனை. அது "அறம்பொரு ளின்பம்வீ டடைதனூற் பயனே."

"மூவகைத்தாய்" என்றது மூவகை நூலை. அது "முதல்வழி சார்பென நூன்மூன் ருகும்."

"பன்மூன்றுரைத்தாய்" என்றது கருத்து முதலிய பதின் மூன்றுரையை. இவ்வாசிரியர் பதின்முன்று என்று கூறினரேனும்,

"பாடங் கருத்தே சொல்வகை சொற்பொருள்
தொகுத்துரை யுதாரணம் வினவிடை விசேடம்

விரிவதி காரந் துணிவு பயனோ
டாசிரிய வசனமென் றீரே ழுரையே''

(நன்னூல், பொதுப் - உக)

என்பதோர் சூத்திரம் பற்றிப் பதினான்கு என்பாருமுளர். இயல் என்றது ஒத்தினை. அது ''நேரினமணியை'' என்ற முதற் குறிப்பினை யுடைய சூத்திரம். எழுவகை மதம், பத்துக்குற்றம், முப்பத்திரண்டு உத்தி இவற்றின் விரிவை நன்னூலுட் காண்க. (உங)

உரைத்தநதி சியமோ டொண்பருந்து தேரை
நிரைத்ததொழிற் சூத்திரத்தி னின்று—விரைக்குழ
செம்பொருள் ஞாபகமாஞ் செய்தி நியதியாம் [லாய்
கம்பமிலா நூலின் கருத்து.

(வி - ம்.) நதி - ஆற்றொழுக்கு. சியம் - அரிமாநோக்கம், பருந்து-பருந்தின்வீழ்வு. தேரை-தவளைப்பாய்த்து. செம்பொருள்-சொல்லொடுபொருள். ஞாபகம்-அரும்பொருளை அறிவித்தல். ஆம் செய்தி-ஆகிய பயன். நியதி-முறைமை. விரைக்குழலாய்-மகடூஉ முன்னிலை. (உச)

கருத்தெச்ச நுட்பம் பொழிப்பகலங் காட்டி
உரைத்த வுதாரணமு முண்டேல்—விருத்தியாம்
பூண்ட கருத்தும் பொழிப்பு முதாரணமும்
காண்டிகையென் றோதல் கடன்.

(எ - ன்): பொதுப்பாயிர விலக்கணங் கூறுதல் நுதலிற்று.

இச் சூத்திரங்களை விரித்துரைத்துக்கொள்க.

(வி - ம்.) இச்சூத்திரங்களை என்றது பெயரார்நூல் என்பது முதல்யநான்கு சூத்திரங்களை. கருத்து-கருத்துரை. எச்சம்-குறிப் பெச்சம் முதலியன. நுட்பம் - நுண்ணியபொருள். பொழிப்பு - பொழிப்புத் திரட்டல். அகலம் - விருத்தி. (உரு)

## அகலக்கவி கேட்பிக்கும் முகூர்த்தம்

கடனு மகரவா காரங் கதிரோன்
உடனு யெழுங்கடிகை யோராறு—இடனுகி

ஏனை யுயிர்க் கூறு மிவ்வகையால் வந்துதித்தால்
ஆனமுதன் மூன்று மழகு.

(எ - ன்): அகலக்கவி கேட்பிக்கும் முகூர்த்தம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அகர ஆகாரமும், இகர ஈகார ஐகாரமும், உகர ஊகார ஔகாரமும், எகர ஏகாரமும், ஒகர ஓகாரமும் முறையே உதயாதி அவ்வாறு நாழிகை யுதிக்கும். இவற்றுள் முதன் மூன்று நாழிகையும் உத்தமம்; பின் மூன்று நாழிகையும் ஆகா.

இவ்வைந்து குற்றெழுத்துக்களை முதலிலுடைய பாக்களுக்குச் சொன்ன காலத்தில் முற்கூற்றில் அரங்கேற்றுக என்பதாம். (உசு)

அழகாக முன்மொழிக்க ளுராய்ந் தனவும்
அழகாகச் சொல்லினவு மன்றி—அழகாகச்
செய்யுட் குரைத்தனவு மெல்லாஞ் செயிர்தீரச்
செய்யினன் றன்றுயிற் றீது.

(வி - ம்.) செயிர்தீர - குற்றம் நீங்க. செய்யின் நன்று-செய்தால் நன்று; அன்றாயின் தீது என்க. (உள)

தீதிலா நூலுரைத்த தீதிலாச் செய்யுளைத்
தீதிலோர் நல்லவையிற் சேர்த்ததற்பின்—ஆதிசொல்
பாவிற் கியைய வுரைக்கிற் பலபொருளும்
தாவில் பொருளோடுஞ் சார்ந்து.

(வி - ம்.) அவை - சபை. (உஅ)

சாந்தின் மெழுகித் தரளத் திரள்பரப்பிக்
காந்தி மணிகனகங் கண்ணுறீஇ—வாய்ந்தலர்ந்த
தாமமு நாற்றி விளக்கிட்டுச் சாறவிசில்
நாமகளை யேற்றுவித்த னன்கு.

(வி - ம்.) சால் தவிசில் - சிறந்த ஆசனத்தில்; பூரண கலச மாகிய தவிசில் எனினுமாம். (உக)

நன்குணர்ந்தோ ராய்ந்த தமிழ்நூலின் நன்னெறியை
முன்புணர்ந்து பாட்டியனூான் முற்றுணர்ந்து-பின்புணரும்
நல்லார்முன் னல்லாய் நலமார் கவியுரைக்க
வல்லாத லன்றே மதி.

(வி - ம்.) வல்லாதல்-வல்லமையாதல். மதி-அறிவு. அன்று, ஓ : அசைகள். (கூ0)

மூன்றாவது பொதுவியல்
முற்றிற்று.

அவையடக்கம்

என்களங்கம் யாவையும் நீக்கி யினிதருளி
நன்களந்தை நூலோடு நாட்டுவரால்—தென்களந்தை
மன்பெயரான் வண்புகழான் வச்சணந்தி மாமுனிவன்
தன்பெயரால் நாட்டுந் தமிழ்.

வச்சணந்தி மாலை என்னும்

வெண்பாப் பாட்டியல் முற்றிற்று.

---

# வரையறுத்த பாட்டியல்

(சம்பந்தப் பாட்டியல்)

## மூலமும் உரையும்



கட்டளைக் கலித்துறை

பார்கொண்ட சோதியன் சம்பந்த மாமுனி
பாதமலர்
நேர்கொண் டிறைஞ்சி நிகழ்த்துகின் றேனெடு
நூல்சுருக்கி
ஏர்கொண்ட சொற்புல வோர்செய்த பாட்டியல்
கற்கமிக்க
சீர்கொண்ட மாமதி யில்லா தவர்க்குத்
தெரிவுறவே. (க)

தெரியாது வந்த வழியடை யாளுஞ்
சிலர்தமக்கு
மரியாதை யின்றென் மதியன்மை யாற்சொன்
மழலைப்புன்சொல்
பெரியார் பொறுப்பர்தம் பேரறி வாண்மையும்
பேதைமைபோய்
விரியாத வென்னறி வின்மையும் பாரில்
விளங்குதற்கே. (உ)

விளக்கிய மங்கல மேமுத லாக
விரித்தபத்தும்
துளக்கற நாடும் பொருத்தமன் றேயில்லை
சொல்லறியா

உளக்கவி வாண ரெனைப்போல நாடொறு
முண்பொருட்டால்
வளக்கவி பாடிப் பிழைப்பதிந் நூலின்
வரும்பயனே. (ங)

சீர், எழுத்து

வருகின்ற மங்கலச் சொல்லினுட் சீர்கொள்க
வாய்ந்தகக்கா
அருகொன்று கிக்கீசொச் சோக்கள்நந் நாவொ
டடுத்தநிந்நீ
தருகின்ற யாவொடு வவ்வாவிவ் வீப்பெயர்
தங்களுக்கு
முருகொன் றெழுத்துநுந் நூயூப் பெயர்க்கு
மொழியநன்றே.

(எ - ன்): சீர், எழுத்து என்னும் இரண்டு மங்கலச் சொல்லிற்குப் பொருந்திய பெயர்களை யுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) க, கா, கி, கீ, சொ, சோ, ந, நா, நி, நீ, யா, வ, வா, வி, வீ என்னும் எழுத்துக்களை முதலாகவுடைய பெயர்களுக்குச் சீர் என்னும் மங்கலச் சொல்லால், சீர்கொண்ட, சீர் தந்த, சீரேறு எனவும்; நு, நூ, யூ, என்னும் எழுத்துக்களை முதலாக வுடைய பெயர்களுக்கு எழுத்து என்னும் மங்கலச் சொல்லால், எழுதரிய எனவும் பாவிற்கியைந்தபடி பாடுக எ - று. (ச)

பொன், பூ

மொழிபொன்குக் கூவுஞ்சௌ காரந்துத் தூவு
முரணிதெத்தே
அழிவில்நெந் நேயொடு புப்பூமெம் மேயொ
டகன்றமொம்மோ

வழுவின்மௌ காரப் பெயர்க்குரை பூக்கொண்
டிசைக்கவௌசை
வழிகொண்மம் மாமிம்மீ மும்மூவை காரவௌ
காரங்கட்கே.

(எ - ன்): பொன், பூ என்னும் இரண்டு மங்கலச் சொல்லிற்குப் பொருந்திய பெயர்களை யுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) கு, கூ, சௌ, நு, நூ, நெ, நே, நெ, நே, பு, பூ, மெ, மே, மொ, மோ, மௌ என்னும் எழுத்துக்களை முதலாக வுடைய பெயர்களுக்குப் பொன் என்னும் மங்கலச் சொல்லால், பொன்னுகும், பொன்கொண்ட, பொன்பயில், பொன்வளர், பொன்கிளர் எனவும்; கௌ, சை, ம, மா, மி, மீ, மு, மூ, வை, வௌ என்னும் எழுத்துக்களை முதலாகவுடைய பெயர்களுக்குப் பூ என்னும் மங்கலச் சொல்லால், பூக்கொண்டு, பூமேவு, பூவணி எனவும் பாவிற் கியைந்தபடி பாடுக எ - று.

(வி - ம்.) இசைக்க : வியங்கோள் வினைமுற்று. (கு)

திரு, திங்கள், மணி, நீர்

வௌவுந் திருத்திங்க ளென்சொற்கள் கொக்கோ
வரும்பெயர்க்காம்
செவ்வுண் மணிச்சொற்கெக் கேப்பெயர்க்
காஞ்செழு நீர்ச்சொற்கையோ
டிவ்வுஞ்சிச் சீயொடு தித்தீத்தை நெந்நோ
வுடனிசையக்
கௌவும்பை காரப் பெயர்க்குநன் றும்படி
கட்டுரையே.

(எ - ன்): திரு, திங்கள், மணி, நீர் என்னும் நான்கு மங்கலச் சொல்லிற்குப் பொருந்திய பெயர்களை யுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) கொ, கோ என்னும் எழுத்துக்களை முதலாக வுடைய பெயர்களுக்குத் திரு என்னும் மங்கலச் சொல்லால் திருமகள், திருவளர், திருப்பதி, திருமல்கு, திருமன்னு எனவும்;

திங்கள் என்னும் மங்கலச் சொல்லால், திங்களூர், திங்களாஸ் எனவும்; கெ, கே என்னும் எழுத்துக்களை முதலாகவுடைய பெயர்களுக்கு மணி என்னும் மங்கலச் சொல்லால், மணிவளர், மணிநிகழ், மணிமேவு, மணிமன்னு, மணிதங்கு எனவும்; கை, பி. பி, நி, நி, நை, நொ, நோ, பை என்னும் எழுத்துக்களை முதலாகவுடைய பெயர்களுக்கு நீர் என்னும் மங்கலச் சொல்லால், நீர்கொண்ட, நீர்மேவு, நீர்கிளர் எனவும் பாவிற்கியைந்தபடி பாடுக எ - று. (சு)

## சொல், கங்கை, வாரணம்

கட்டுரை சொற்கொளௌள காரஞ்சுச் சூக்கள்செச்
சேக்கள்தௌநௌ
ஒட்டுரை பேர்க்கினி தாங்கங்கை அஆஒ
ஓக்கள் தத்தா
விட்டுரை தொத்தோ விழையோப் பெயர்க்குயர்
யானையின்பேர்ப்
பட்டுரை வாரணங் கொண்டுஞெஞ் ஞொப்பெயர்
பாடுகவே.

(எ - ன்): சொல், கங்கை, வாரணம் என்னும் மூன்று மங்கலச் சொல்லிற்குப் பொருந்திய பெயர்களை யுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஔ, சு, சூ, செ, சே, தௌ, நௌ என்னும் எழுத்துக்களை முதலாகவுடைய பெயர்களுக்குச் சொல் என்னும் மங்கலச்சொல்லால், சொற்கொண்ட எனவும்; அ, ஆ, ஒ, ஓ, த, தா, தொ, தோ, யோ என்னும் எழுத்துக்களை முதலாகவுடைய பெயர்களுக்குக் கங்கை என்னும் மங்கலச் சொல்லால், கங்கை சூழ், கங்கைநீர், கங்கைசேர் எனவும்; ஞெ, ஞொ என்னும் எழுத்துக்களை முதலாகவுடைய பெயர்களுக்கு வாரணம் என்னும் மங்கலச் சொல்லால், வாரணஞ் சூழ் எனவும் பாவிற்குப் பொருந்தியவாறு பாடுக எ - று.

கங்கை யென்னும் மங்கலச் சொல்லுக்குப் பரியாயமாகக் கடல், கார் என்னும் மங்கலச் சொற்களைக் கொண்டு கடல்செறி, கடல்வளை எனவும்; கார் கொண்ட, காரேறு எனவும் பாடினும் இழுக்காது. (எ)

## குஞ்சரம், உலகு, பார்

பாடுயர் குஞ்சரம் இஈயு ஞாவும் பகர்பெயர்க்காம்
நீடுல கங்கொடு பப்பாப் பெயர்க்கு நிரந்துரைக்க
பீடுறு பார்கொடு சச்சாப் பெப்பேயொ
டொளிர்ந்தபொப்போ
நாடுவெவ் வேமுதல் நண்ணிய பேர்க்கு
நயந்துரையே.

(எ - ன்): குஞ்சரம், உலகு, பார் என்னு மூன்று மங்கலச் சொல்லிற்குப் பொருந்திய பெயர்களை யுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இ, ஈ, ஞா என்னும் எழுத்துக்களை முதலாக வுடைய பெயர்களுக்குக் குஞ்சரம் என்னும் மங்கலச் சொல்லால் குஞ்சரஞ்செறி, குஞ்சரம்பின், குஞ்சம்பொலி எனவும்; ப, பா என்னும் எழுத்துக்களை முதலாகவுடைய பெயர்களுக்கு உலகு என்னும் மங்கலச் சொல்லால் உலகெலாம் எனவும்; ச, சா, பெ, பே, பொ, போ, வெ, வே என்னும் எழுத்துக்களை முதலாக வுடைய பெயர்களுக்குப் பார் என்னும் மங்கலச் சொல்லால், பார் கொண்ட, பார்மேவு எனவும் பாவிற்குப் பொருந்தியவாறு பாடுக எ - று. (அ)

## தேர்

உரைதரு தேர்கொடு உஊஎ ஏஐ
யுவந்தநைமை
விரைதரு பேர்கட்கு நேரே விளம்புக
மேவுதண்ணீர்த்
திரைதரு வேலை யுடனேசெஞ் சேலையுஞ்
சேரவென்று
வரைதரு மஞ்சனந் தோய்ந்தரி சிந்திய
வாள்விழியே.

(எ-ன்): தேர் என்னும் மங்கலச் சொல்லிற்குப் பொருந்திய பெயர்களை யுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உ, ஊ, எ, ஏ, ஐ, நை, மை என்னும் எழுத்துக்களை முதலாக வுடைய பெயர்களுக்குத் தேர் என்னும் மங்கலச் சொல்லால், பாவிற்குப் பொருந்தியவாறு பாடுக எ - று.

மேவுதண்ணீர்......வாள்விழியே என்பது மகடூஉ முன்னிலை.

(வி - ம்.) வேலை-கடல், சேல்-சேல் மீன், இவை மாதர் கண்களுக்குவமை. (கூ)

வாளா வுரைப்பின்றென் னூலோர் வகுத்த
வருணமுண்டி
கேளார்ந்த நல்ல கதிகண மாய்ந்துரை கேழ்கிளரத்
தாளார் கமலமு நீலமும் போன்று தருக்கி முட்டி
நீளா மதர்த்தரி சிந்திய வாட்க ணிரைவளையே.

(எ - ன்): இந் நூலினெறிபு கூறுகின்றது.

இச்செய்யுளுக்குப் பொருள் விளங்கிக் கிடந்தமையின் விரித்துரைத்துக் கொள்க. (கய)

வரையறுத்த பாட்டியல்

முற்றிற்று.





# வெண்பாப் பாட்டியல்

## பாட்டு முதற்குறிப்பகராதி


| செய்யுள் | பக்கம் | செய்யுள் | பக்கம் |
|---|---|---|---|
| அழகாகமுன் | எரு | கார்த்திகை | சுசு |
| அறிந்திடி | சக | குணக்கோடா | எக |
| அவையின் திற | சுக | குறிலேந்தும் | கo |
| ஆக்கியோன் | எஉ | குன்று நா | எo |
| ஆங்கவிருத் | சஉ | கூறுமொருபோகு | ௩க |
| ஆதியிடை | உக | சாந்தின் மெழுகித் | எரு |
| ஆயவகப் | ருஅ | சார்சுவையே | ருஎ |
| ஆய்ந்த கலித் | ௩ரு | சாற்றறிய | உக |
| ஆரொருவன் | சுஉ | சீரெழுத்துப் | அ |
| இசைந்த நிலங் | ருக | செயலார் | ருசு |
| இழுக்கிலா | சுஅ | சென்றவிரு | சுஅ |
| இறையஞ்சா | எக | சொல்லியநாண் | கக |
| ஈசர்க்கு | ௩உ | தந்துரைத்த | சச |
| ஈண்டிய | ௩௩ | தப்பாத மூன்றைந்தே | க |
| ஈறில்வணக்கங் | ருரு | திருமங்கை | உச |
| உரைத்த நதி | எச | திறந்தெரிந்த | சசு |
| உற்றஅறம் | சஎ | துணிதற் கரிது | சுஎ |
| உன்னலரன் | எo | தெரிந்த யரல | க௩ |
| எடுத்த பொருளி | உரு | தீதிலா நூலுரைத்த | எரு |
| எண்ணுங் குறிலா | கக | தொகுத்துரைத் | எ |
| என்களங்கம் | எசு | தொடர்ந்த | ருக |
| எய்ந்த விருபா | ௩எ | தொழிலார்ந்த | ருஉ |
| எத்திய பூவை | எo | நலனடக்கஞ் | சுக |
| ஒன்றுமகவலா | சஅ | நவிலு மறமுத | சுக |
| ஒழியா வுயிரனைத் | கச | நன்குணர்ந் | எசு |
| ஒட்டுமதி | சுசு | நாட்டிய ஒ ஓ | உo |
| ஓது சந்தத் | ருo | நிலையார் குடை | சo |
| ஓர்ந்தகவல் | ௩அ | நிறுத்த வெளி | சஎ |
| கடனு மகர | எச | நிறைமதியால் | சுo |
| கண்டுரைக்கிற் | உஅ | நேருந்தசாங்க | ௩சு |
| கண்ணுய | எஉ | பகருங்கா | சச |
| கருது சில | ருஅ | படைத்திறஞ் | சக |
| கருத் தெச்சு | எச | பண்பார் வணிகர் | கச |
| கவிக மகன் | உச | பத்தாதி நூறந்தம் | ௩o |

| செய்யுள் | பக்கம் | செய்யுள் | பக்கம் |
| --- | --- | --- | --- |
| பயனுன்காய் | ௭௩ | மதித்த கசதப | ௧௨ |
| பரிசுடைய | ௧௬ | மன்னிய வெண்பா | ௩௬ |
| பன்னியநூற் | ௭௨ | மாட்டும் யகரத் | ௧௮ |
| பாங்கார் | ௨௭ | முதல்வனாரின் | ௩௪ |
| பாட்டுடை | ௬௭ | முறைதரு | ௨௮ |
| பார்நிகழு | ௭௧ | மூன்மொழி யாக | ௨௩ |
| பிறிந்த சகரத்து | ௧௬ | மூண்ட அமர்க் | ௫௫ |
| புகரில் வணக்கம் | ௫௬ | மொய்யின் திறம் | ௫௪ |
| புகழ்தரும | ௬௮ | யாப்புடைய | ௨௬ |
| புரிந்த மயக்க | ௫௨ | வகையுளி சேர்தல் | ௮ |
| புல்லு மலையாறு | ௩௧ | வந்த பகரத்து | ௧௭ |
| பெயரார் | ௭௩ | வழக்குள் மரபி | ௬௭ |
| பெற்றசீர் | ௫௩ | வளர்த்தல் | ௭0 |
| பேசு முயிரடைவே | ௧௬ | வேண்டுங் குறில் | ௨0 |
| பேரெழுத்திற் | ௨௫ | வேய்ந்த விருத் | ௪௨ |
| போற்றுந் தகர | ௧௭ | வேறு மறை | ௬௩ |
| மதிகொண்ட | ௧ | வைக்கும் புயந் | ௩௧ |


## வரையறுத்த பாட்டியல்

### பாட்டு முதற்குறிப்பகராதி


| செய்யுள் | பக்கம் | செய்யுள் | பக்கம் |
| --- | --- | --- | --- |
| உரைதரு | ௮௩ | மொழிபொன் | ௮0 |
| கட்டுரைசொற் | ௮௨ | வருகின்ற | ௮0 |
| தெரியாது | ௭௧ | வாளாவுரை | ௮௪ |
| பீடுயர் | ௮௩ | விளக்கிய | ௭௧ |
| பார்கொண்ட | ௭௧ | வெளவுந்திருத் | ௮௧ |